நீடுமனநிலை நின்றிலனாகினு
மோடும்வகையால் விடாதேயுழன்றவன்
பாடும்பவங்கள் பலகடந்தாயினும்
வீடும்பெறுமின்னம் வேறுஞ்சிலகேளாய். (௯௫)

எல்லாத்தவமு மியற்றிநின்றோனினு
மெல்லாக்கலைகளுங் கற்றுணர்ந்தோனினுஞ்
செல்லாக்கருமமெல் லாஞ்செய்தவனினு
நல்லான்வலியோகி நீயிதுநண்ணுவாய். (௯௬)

வேறு.

இருவகையவினையறுக்கு மியோகிகளெல்லார்களினு
மருவரியமனத்தினையு மன்பையுமென்பால்வைக்கு
மொருவனுமேயானுவக்கப் படுகின்றேனெனவுரைத்தா
னருவெனவன் றுருவெனமுன் பாரர்னுமறிவரியான். (௯௭)

ஆறுவது
யோகவத்தியாயம்-முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - உ௦௭.

---

ஏழாவது

## மாயாரூப அத்தியாயம்.

உய்யவன்பினொடுமென்னையே யடையுமியோகமே பயிலுமி யோகிதா, னையமின்றியெனையேயடைந்திடுமதைய நீயுமறிவாயென, வையமுண்டுமறைநீர்மையுண்டிடையர் மாதருண்டிடமலர்ந் திடுஞ், செய்யதண்பவளவாய்திறந்து திருமாதுகேள்வனிவைசெப்புவான். (௧)

மாயுமாயைமறையாத நெஞ்சினிடை மற்றெனுண்மையினை வாய்மையா, லேயுமாறறவறிந்துளோர்களறியாத தொன்றுமிலையென்னினு, மாயுமாநுடரநேகர்பாலொருவ னென்னையாயுமனம் வைத்துளா, ரையுமாநுடரனேகர்பா லொருவனேயறிந்துமுடிவானையா. (௨)

மண்ணுநீருமெரி தீயும்வாயுவுமவ் வானினோடுமனபுத்தியு, மெண்ணுநீர்மைகளிலியானெனும் பதமுமெண்ணுமெட்டுமிவையன்றியே, பண்ணுநீர்மைகளின்மேலதாயுலகி லியாவையுங்கொடுப

ரித்துடற், கண்ணாநீடுயிருமாகியென்னுடைய மாயைநிற்பதுகை வேலினோய். (௨)

கண்ணினாற்றெரிய லுற்றுணர்ந்தவிவ் விரண்டினாலும்வருகாரியம், பண்ணிநிற்பனநடப்பவென்ற பொருளியாவுமற்றவிருபான்மையே, நண்ணிநிற்ப னாலகாதலா னுலகி னாசவுற்பவமுநானலா, தெண்ணின்மற்றறிவதில்லை யெப்பொருளு மென்னிலன்னியமதில்லையால். (௪)

வேதமாகிநிகழ்யானலா துலகி லென்னில்வேறெனவிளங்கிடும், பூதமானவைபொறுக்கவேறுபொறையாளரில்லையெதுபோலெனி, லோதுமாமணியநேகமூடுருவு கோவைநூலிலொருபான்மைபோற், பேதமானபொருடோறுநான்மருவி நின்றவாறுநனிபேசுவாம். (௫)

வேறு.

திரியுமிருகதிரினிடைத் திகழொளிநான் றிருமறையி
னரியமுதலெழுத்துநா னாடவர் பாலாண்மையுநான்
விரிபுனலிற்சுவையுநான் மேதினியில்வாசமுநா
னெரியில்வருவெம்மையுநா னாகாசத்தெழுமொலிநான். (௬)

ஆன்றவறிவுடையோர்பாலறிவு நானடங்கினர்பால்
வான்றவநான்வளர்நன்மை பூண்டார்பால்வண்புகழ்நான்
றோன்றன்மிகுதிறலோர்பாற்காம முறுத்தொல்வலிநா
னான்றுபொருளனைத்தினுக்கு முயிராகியுள்ளேனான். (௭)

மூன்றுகுணவகையாகி மூடிநின்றபொருண்முழுதுந்
தோன்றுவதுமென்னிடையே யெனைத்தொடர்ந்தேநிற்பதுவு
மான்றவமற்றவற்றினிடையான் றோன்றேனவற்றினுக்குச்
சான்றெனநிற்குவனெல்லா லவைசார்ந்துவாழேனான். (௮)

மைக்குணங்களொனுமிவற்றின் மயமாயம்மயத்துவமா
யிக்குணங்கண்மூன்றாலு மயக்கப்பட்டறிவிழந்து
தொக்கினங்குநின்றவுயி ரிவையெல்லாஞ்சுடர்வோலா
யக்குணங்கள்கடந்தவெனை யறியுமோவறியாவால். (௯)

இவ்வகையகுணமூன்றி னியற்கைத்தாயாராலுஞ்
செய்வகையதல்லாவென் மாயையினாற்றிகைப்பொழிந்திங்
குய்வகையதரிதெவர்க்கு மென்னையேயெப்பொழுது
மெய்வகையோடடைகின்ற மனமிலரோல்வேல்வேந்தே. (௧௦)

ஊழாலேவருமிந்த மாயையினாலேயுள்ளம்
பாழாகவறிவிங்கே பறியுண்டுநெறிநின்றோர்
வீழாததீவினையே வினையாக்கிவிளைக்கின்றார்
கீழானோரெனையடையா ரடைவாருஞ்சிலருளர்கேள். (௧௧)

வேறு.

செல்வம்விரும்பினர் செல்லலடைந்தோ
ரல்லல்கெடுக்கெனை யன்புசெய்வோர்க
ணல்லதறிந்தமெய்ஞ் ஞானியிந்நால்வரும்
வல்லதிலென்னை வணங்குதவத்தோர். (௧௨)

இன்னவர்தங்களி லென்னொடும்வேறா
யுன்னலிலாமை யின்ஞானியுயர்ந்தோ
னன்னவனல்ல னெனக்கவனுக்கே
நன்னலம்வைப்பது நானுநலத்தோய். (௧௩)

ஓதருஞானியென் னுண்மையினுள்ளே
யேதலினாலவ னானெனவேயா
மாதலினாலவ னேசிலவாய
காதலினாய பவங்களினெய்தான். (௧௪)

விரியவுணர்ந்த விழுப்பொருளெல்லா
முரியவெனன்றி யிலாதவொழுக்கந்
தெரியவறிந்தெனை யேசெறிகிற்பா
னரியனவன்பெறுதற் கயில்வேலோய். (௧௫)

மற்றவருந்தம் மனங்களில்வைத்த
பற்றதிலேபறியுண் டறிவெல்லா
முற்றவைதந்திடு தெய்வவொழுக்கா
னற்றவநின்றவை நண்ணுவர்வேலோய். (௧௬)

யாவனொருத்த னியாதொருதெய்வ
மேவவருச்சனையன் பின்விளைப்பா
னாவசலிப்பற மன்பவனுக்கே
யாவனமுற் றதளித்திடுவேனான். (௧௭)

அளித்தவவன்பொடு மத்தெய்வநாளுங்
களித்துவணங்கினர் காதலவெல்லாம்
வெளிப்படமுற்று மளித்திடுவேனா
னெளிப்பரிதா முருமஞ்சவுடன்றோய். (௧௮)

சிந்தையினித்தெய்வ மெய்த்தெய்வமென்றே
முந்தவருச்சனைசெய்து முடிக்கு
மந்தமனத்தார்பெறும் பயன்வாணு
ளந்தமுடைத்த தனித்தமுமையா. (௧௯)

வேறு.

தானந்தமிலியுவமைதர நின்றுதாவரிய
வானந்தவுருவமெனு வென்னையொன்றுமறிவதிலர்
கோனந்தமகனரசர் குலமைந்தனிவனுமெழி
லானந்தமிலியொருவனிவனென்பரறிவிலிகள். (௨௦)

மருவுற்றபிரகிருதியதிலுற்று மறைவனெழி
லொருவர்க்குமறியும்வகை வெளிநிற்பதிலையுலகில்
வெருவுற்றபெருமயலின் மனமுற்றுவிழிமறைய
வருவுற்றவென்னையுலக மறிகிற்பதிலையடைய. (௨௧)

வேறு.

போனவையினிமேற் புகுதநின்றன விப்பொழுதுபோகின்றனவனைத்தும், யானறிந்திருப்பனியாவையு முலகிலென்னைமற்றியாவருமறியார், மானவெஞ்சிலையாய்வேண்டல் வேண்டாமைதன்னிலேவருகுணமயக்காற், றூனமைந்துருவாய்ச்சனித்திடும்பொழுதே தந்தமெய்யறிவுசார்ந்திடலால். (௨௨)

வியக்கமேன்முயன்றநல்வினைமாந்தர் விரும்பலராகிமுன்செய்த, பயக்கமேவியதீவினையெலாமறவே பற்றறப்பறிந்துமுன்போனுற், றுயக்கமேபுரியுஞ்சோகமேமுதலாந் துவந்துவங்குணங்களிற்றொடர்ந்த, மயக்கமேவலராயொழுக்கமேநிலைநின் றென்னையே மனத்திடைவைப்பார். (௨௩)

எறிவரும்பிணிமூப்பிறப்பொடுபிறப்பென் றிவை கெடுத்திடல்பொருட்டாகக், குறிவரும்பரிசுநினைத்துமற்றென்னையே கூடுதன்மேவிநின்றவர்க, ளறிவரும்பிரமந்தன்னையுமதனை யறியுமெய்யறிவையுமறிவி, னெறிவருங்கருமமனைத்தையு மறிவரறிந்தபின்னிகழ்வதுங்கேளாய். (௨௪)

வேறு.

தேடும்பழையவழிபூதமதி தெய்வத்தோடதியெச்சங்
கூடும்பரிசுநின்றவென்னை யறிவாரிந்தப்புழுக்கூடு
வீடும்பொழுதுமென்னைமெய்யே யறிவாரொன்றுணியாம்வெவ்வே
றோடும்பழையமாயக் கூத்தாட்டுகின்றவம்மாயன். (௨௫)

ஏழாவது
மாயாரூபவத்தியாயம் - முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - ௨௯௨.

எட்டாவது

## எழுவகைவினாவுரைத்த அத்தியாயம்.

அடையஞாலத்தை யார்த்ததிலார்ப்புறு
திடையர்தாம்பிடை யார்ப்பவிருப்பவ
னுடையனுகமுன் போதினவேகொடவ்
விடையனானவன் மீளவியம்புவான். (௧)

வேறு.

ஆயபிரமத்தோடத்தி யாத்மமமைகரும
மேயவதிபூதமதி தெய்வமதியெச்சங்
காயமதிலுள்ளபரி சுங்கெழுமுகாயம்
வீயலுறுபோழ்தினுனை மெய்தெளியுமாறும். (௨)

விரியவுரைசெய்தருள வேண்டுமெனமீண்டவ்
வரியரவிலேதுயிலு மாயவனுரைப்பா
னரியதழியாமையத னைத்தினுமுரைக்கிற்
பெரியதுமொழிந்த பிரமம்பிறவையுங்கேள். (௩)

வேறு.

அந்தக்கரணங்களினின்ற வறிவத்தியாத்மமாவதுதா
னிந்தப்பிறவிதனையாக்கும் யாகங்கருமமென்பதுதா
னந்தற்கமைந்தவுடம்பதனை நானென்கின்றததிபூதம்
பந்தப்படுமிவ்வுடற்கமைந்த புருடன்றெய்வமெனப்படுவான். (௪)

எஞ்சுதலையிலதியெச்ச மாகின்றேனுனிறக்குங்கா
னெஞ்சுகவருநெறிகளெலா மடைத்துநினையப்படுவதுநா
னஞ்சுபுலனும்பொறியைந்துமடக்கிய றிவென்பாலதாய்த்
துஞ்சுமவர்களெனையடைவ ரெவ்வாறென்னிற்சொல்லக்கேள். ( )

இந்தவுடலம்விடும்பொழுதுயாவனி யாதொன்றினை நினைந்தா
னந்தவளவேயந்தப்பாவனையா லதனையடையுமா [ஞ்
லெந்தனியல்பேயெப்பொழுது மிதயத்திடைக்கொண்டென்பாலா
சிந்தையொடும்வாமளர்தொடங்கி லதனாலெனையேசெருதியால்.( )

நல்லகருமயோகத்தும்ஞானயோகமதுதனிலுஞ்
செல்லுமனனைமிகச்செலுத்திப் பிறிதொன்றினையுஞ்சேராதார்
சொல்லவரியகதிரவன்மண்டலம்போற் றோன்றுந்தொல்லோனை
யல்லதடையாரவனியற்கை யடையும்பரிசையறையக்கேள். (௭)

எல்லாப்பொருளுமறிவானை யெல்லாப்பொருட்கும்பழையானை
யெல்லாரையுந்தன்னிலைநிறுத்து வானையிரம்பச்சிறியானை
யெல்லாப்பயனுமீவானை யார்க்குநினைதற்கரியானை
யெல்லாவிடத்துமிருடீர்த்த விளவெங்கதிர்போலெழுவானை. (௮)

மருவற்குரியவன்புடையார் மயங்காயோகமனத்தாலே
புருவத்திடையேதன்னுடைய புரைதீருயிரைப்புகநிறுத்தி
யுருவத்தினைவிட்டிடலிந்த யோகத்தாலேயவனோடும் [லோய்.
பொருவப்படுமப்பொருண்மேலே யின்னம்புகல்வன்பொருவே

வேறு.

யாதொன்றறமறைதெரிந்தோ ரழியாதென்றெடுத்துரைப்பர்
யாதொன்றையவாவறுத்த யோகிகடாமெய்திடுவர்
யாதொன்றையுறநினைந்தோர் காமமுதலியவிழப்ப
ரியாதொன்றப்பரம்பொருளா மதனைச்சுருங்கவியம்புவன்கேள்.

வேறு.

அஞ்சுபுலன்வழியவை யடைத்தயலுறாதே
நெஞ்சுதனையிதய கமலத்திடைநிறுத்தி
யெஞ்சுதலிலுயிர்வளியை யுச்சியினிலேற்றி
யுஞ்சுபுகுநெறியென வியோகுடனிருந்தே. (௧௧)

ஓதலினியற்கையினொடோமெனு மெழுத்தை
வாய்தனிலுரைக்க மனமானதுதனித்தே
மேதகுமெனைத்தெளியவா விதனைவிட்டோர்
ஈதலினியற்கையெனையே யடைவர்மிக்கோய். (௧௨)

இப்பரிசினொன்டொரா றிங்காளவென்று
தெப்பொழுதுமென்றனியல்பே நினையலுற்றார்
கைப்படுவனியானெனியல் கைப்படவிருந்தோர்
பொய்ப்பிறவியாளறு மறித்தடைதல்பூணார். (௧௩)

வேறு.

செய்யாமுன்சார்ந்தவினை தீர்ந்தபோதே திசைமுகனுடனைந்
தோருந்திரியமீள்வர், மெய்யாகவெனையடையு மவரோகண்டாய்
மீளாதநெறி யடைந்தார்வேறுகூறி, லையாகேள்சதுர்யுகமீரைஞ்
ஞூறுமொருபகலா மாண்டொருநாறயற்குமுள்ள, தெய்யாதங்க
வனுக்கோர்பகலிற்றோன்றி யிராவிறக்குந் தன்மைத்தாமியோனி
யெல்லாம். (௧௪)

வேறு.

நெறியில்வருவியத்தமோடவ்வியத்தங் கூடாதநிலைமையென்றும், பொறியழியுமாக்கைதனி லழியாதபுலமென்றும்புதிதன்றென்று, மறிவரியநெறியென்றுமழியாதபொருளென்று மடைந்தோர்பின்னைப், பிறிவரியநெறியென்றும் பெரியோர்கள்பேசுவதென் பெற்றிகண்டாய். (கரு)

எப்பொருளுமியாதொருவனுள்ளடங்கிற் றெங்குமாய்நிற்கின்றான்யா, ரப்பரமபரம்பொருளாயுள்ளவனை யன்பாலேயடைவதையா, வெப்பரிசுவருங்காலத்திறந்தார்கள் பிறவாதார்பிறப்பரொன்னி, லப்பரிசுவருங்காலத்தினையறிய வுரைக்கின்றேனதனைக் கேட்பாய். (கசு)

அங்கியொளிபகல்வெண்மையாங்காலதேவதைகளவர்களோடுந், தங்குமறுதிங்களிடையுத்தராயணஞ் சார்வார்மறத்துஞ்சாரார், கங்குல்புகைகறுப்பென்னுங்காலதேவதை யடைந்துபிறக்குங் கண்டா, யெங்குமறுதிங்களிடைதக்கணாயனத் திறந்தயோகியென்பான். (கஎ)

வேறு.

ஏதமானதின்றியிவ் விரண்டுமாயுமியோகிதான்
வேதமோதிவேள்விதான மெய்த்தவங்கள்செய்துளா
ரோதுவாயநற்பதங்களெய்தி வீடுமெய்துவா
னுதலாலவ்வியோகமே செய்யென்றுமாயனோதினான். (கஅ)

எட்டாவது
எழுவகைவினைவுரைத்தவத்தியாயம்-முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உருo.

---

ஒன்பதாவது
# மாயாவிகார அத்தியாயம்.

---

ஈர்வன்றுயர் களையும்பத மீதன்றுகொ லெனவே
யார்வஞ்செயும்விசயன்கொளுமாசங்கையையறியாக்
கார்வந்தெனவவனன்புறு களிகொண்டெழவெளியே
தேர்வெண்பரிகுசைகொண்டெழு பாகன்றிருமொழிவான். (க)

அறையும்பொருள்களின்முன்பனு பவமொன்றியவதனை
மறையும்பொருள்களின்முன்பற மறையும்பொருளினைமே

லிறையுந்துயரநுவின்றிழு னியைகின்றதையிசைவோ
டுறையுந்துகளறநின்றதை மொழிகின்றனனுணர்நீ. (௨)

அழிவொன்றிலதறனென்றிய தரிதன்றியததன்மேல்
வழிவந்தமெய்யறிவன்பில ரெனையெங்கனுமருவா
திழிதந்திடுசெனனங்கொடு மரணங்கொடுமிறனே
யுழிதந்திகபரமொன்றிய வுருவங்களிலுழல்வார். (௩)

வேறு.

யாருமறியப்படாமையே யெனக்குவடிவாயுடையநா
னுருமூலகங்களையடையப் பரப்பிநிற்பனாதலினாற்
சாருமூலகிற்சராசரங்க ளனைவேயவற்றையான்சாரேன்
சேரும்பரிசுநின்றாற்போற் றெளியாதார்க்குத்திகழுமால். (௪)

வேறு.

முன்னேயொன்றுங்கலவாதி யானிற்பன்முழுதுமாய்நின்ற
வந்நேர்மையினாலுலகமென்றே டங்கங்கலவாதாதலினா
லென்னேயென்றனியற்கையினைப் பாராயிந்தச்சகமெல்லா
மன்னேயென்றன்மாயைபெறுமாங்காரமுன்னாய்த்தருவன்காண்.

வேறு.

என்னுருவிற்புணராதே யென்னைவிடத்தோன்றாதே
மன்னுயிர்களையென்றுஞ் சார்ந்துவரும்வகைகேட்கி
லுன்னுமிடமெங்குநிறைந் தொளிர்கின்றவானெங்குந்
துன்னியற்கைசெறிகாற்றின் றோற்றம்போற்சுடர்வேலோய். (௫)

ஈண்டுபொருளிவையனைத்து மிறக்குங்காலென்னிடையே
மாண்டுபுகும்பிறக்குநாண் மற்றவைதான்வரன்முறையே
மீண்டுபுறப்படுமெல்லா மாதலினான்மெய்பார்க்கி
லியாண்டுமுயிர்படைத்துக்காத் தழிக்கின்றேனியானேகாண். (௭)

வேறு.

விலங்கலனையாய்பலங்கருதாடன் வேண்டல் வேண்டாமையை விட்டுச், சலங்கொள்வினைகளவைசெய்வனாதலாலென்னையவைசாரா, வுலண்டுவாயானூற்றந்த நூலாற்கட்டுண்பதுபோலப், பலங்கணினைவாரதனாலே கட்டுண்டாய்க்கெபட்டுழப்பார். (௮)

வேறு.

ஊர்வனநிற்பனவாக வுலகவையுண்டாக்குமெனை
யேர்வுபெறவறியாதார் மகனென்றேயிகழ்ந்திடுவர்

வேறானநெஞ்சத்தாசை வினைகளையிடையச்செய்வா
ராறானிலவர்கடாமு மரக்கரோடசுரராவார். (௯)

அறிவிலென்னையாக வறிந்துகொண்டமைதியாலே
பொறிவழியடைத்தெப்போது மென்னையேபோற்றிசெய்து
நெறியினல்வழுத்திவாயா லென்னையேநினைந்துநெஞ்சாற்
செறிதருமிவர்கள்கண்டாய் தேவரிற்றெரியப்பட்டார். (௧௦)

வேறு.

காலத்தாலும்பொருளிடத்துங் கணித்தற்கரிதாகியவென்னை
ஞாலத்தார்கள்புகழ்வரிய ஞானயாகங்களினாலே
கோலத்தால்வேறாகவுமெய்க் குறியாலொன்றாகவுங்கொண்டு
சாலத்தாழ்வாரவருடைய தன்மையினைநான்சாற்றக்கேள். (௧௧)

வேறு.

வேதமொழிவேள்விமிகு வேள்விபிதிர்க்கே
யீதலுறும்வேள்வியெரி நெய்சருவிவற்றாற்
காதலுறுவோர்கள்புரி காரியமிதெல்லா
நாதமுதலாயபொரு ளாயவையுநானே. (௧௨)

ஆயிலுலகங்களை யளித்தொளிவளர்க்குந்
தாயினொடுதந்தையவர் தந்தைதலைகண்ணான்
போயினவினைப்பய னளித்தல்புரிவேனா
னேயுமறைமூன்றினுட னோமெனுமெழுத்தியான். (௧௩)

வேறு.

எல்லார்க்குங்கதியுநா னிருவினைப்பாரகனுநா
னெல்லார்க்குந்தலைவனா னெப்பொருட்குஞ்சான்றுநா
னெல்லார்க்குமுறைவிடநா னியார்க்குமிடர்தீர்ப்பேனா
னெல்லார்க்குநல்லேனா னெப்பொருட்கும்வித்துநான். (௧௪)

வேறு.

தாங்கியநீரையெல்லா மிரவியாய்த்தலத்துநின்று
வாங்குகின்றேனுமீள மழைகளாய்க்கொடுக்கின்றேனு
மீங்குமெய்யுணரிலியானே யாதலாலியாதொன்றேனு
மாங்கருச்சனைசெய்கின்றா ரென்னையேயருச்சிக்கின்றார். (௧௫)

ஞானமாயொன்றாய்நின்ற வென்னையேநானுவாகப்
போனதீவினையின்மாந்தர் வேள்வியாற்பூசித்தத்தால்

வானமாமுலகமேறிவாழ்ந்து மண்ணிடையேவீழ்ந்திட்
டீனமாமாலசையாலே யிறப்பதுபிறப்பதாவார். (௧௬)

மின்னையேய்வேலோயென்னை மேவுவார்வேண்டிற்றெல்லாம்
பின்னையேயென்றுதன்றே யளித்தவைகாப்பேன்வானோர்
மன்னையேமுதலாந்தெய்வம் வணங்குகின்றாருமற்றென்
றன்னையேவணங்குகின்றார் தாமறியாததேகாண். (௧௭)

தேவராயடைந்தோர்தேவ ராவர்கள்பிதிர்கடம்மை
மேவவேயடைந்தோரந்தப் பிதிர்களாய்விளங்காநிற்பா
ரியாவர்கள்யாவர்பாலா ரவர்களேயாவரொன்று
லாவவென்னடைந்தார்யானே யாவதற்கையமுண்டோ. (௧௮)

போதலரிலையேநீரோ பெற்றதேகொண்டுபோற்றிக்
காதலாற்றூயவன்பர் தந்ததேகளித்துக்கொள்வ
னுதலாலீவநோற்ப வுண்பவற்றிவைகளேகொண்
டிதெலாமெனக்காய்த்தந்தா லென்னையேயெய்தலாமால். (௧௯)

எப்பொருட்டனக்குமியா னுத்திருத்தலாலெனக்கியாரு
மொப்பர்களினியரின்று தானொவொருவரில்லை
யிப்படியறியுமன்பர் பக்கலேயானுநிற்ப
னப்படியவருமென்பா லங்ஙனேயமர்ந்துநிற்பார். (௨0)

ஊனையேமுதலாயென்பா லொருக்கியென்னுணர்வார்நாளு
நானையேவிட்டுத்தீமைபுரியினு மவர்களல்லா
ரோனையேப்புயத்தாயென் றுங் கேடிலாவின்பமல்லா
தானையேயொருகேடில்லை யெங்கணுமவருக்கையா. (௨௧)

வணிகருமற்றவேளாண் மாந்தருமகளிர்தாமும்
பணிவொடுமென்னைப்பேணிப் பற்றறுத்திடுவரொன்று
லணிமுடியரசர்மேன்மை யந்தணரடைவராகிற்
றணிவரும்பிறவிதீரச் சாற்றவேண்டுவதுமுண்டோ. (௨௨)

மின்னையேயனையவாழ்வி னின்றநீவிருப்பினோடு
மென்னையேவணங்கியென் று மென்னையேநினைதியாகி
லென்னையேயடைதியென்றே யியம்பினுனிலங்குவாட்கட்
பின்னையேய்முறுவலோடும் பேய்முலையுண்டபெம்மான். (௨௩)

ஒன்பதாவது
மாயாவிகாரவத்தியாயம்-முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உஎ௩.

---

பத்தாவது

## விபூதி அத்தியாயம்.

அரியவெனதுநிலைமையைமுன் பளவேசொன்னேனதுகேட்டே
யுரியமனனிற்களிகூர வுவவாநின்றவுனக்கதனை
விரியமொழிவன்கேளென்று வேதாந்தலைக்கேவீற்றிருக்குங்
கரியமுகிலான்செவ்வாயாற் காதல்கூரக்கட்டுரைப்பான். (க)

வேறு.

தேவர்களுமுனிவர்களு மசுரர்களுஞ்சித்தர்களும்
யாவர்களுமறியாரென் பெருமையையென்பழைமையினுற்
சாவகையும்பிறப்புமிலா வெனையறியத்தகுவாரப்
பாவவினையறவிட்டுப் பரகதியையடைகிற்பார். (உ)

புத்திபொறைதவஞானம் புகழ்பழிதீர்கொலைதெளிவு
சத்தியநற்சமைதமைநற் செபந்தானஞ்சாவுபிறப்
பத்திகொடுநிறைவின்ப மிடரஞ்சலஞ்சாமை
யித்தனையுந்தோன்றுவதென் னிடைநின்றேயெனத்தெளிவாய். ()

வேறு.

எனைத்துவிதத்த தவத்தெழுவோரு
மனைத்தையுநிற்ப நடப்பனவாக
* மனைத்தமனுக்களோர் நால்வருமென்ற
னினைப்பினுதித்தன ரொன்பதுநேர்வாய். (ச)

இப்பரிசென்னை யறிந்தவரொன்பால்
வைப்பர்கள்சிந்தையை மன்னுயிரோடு
மப்பரிசேயறி யாரையுமாங்கே
யுய்ப்பருரைப்பர்க ளிப்பருவப்பர். (ரு)

நிரந்தரமிப்பரி சென்னைநினைப்பார்க்
கரந்தைகெடுத்தெனை யாயுமனத்தைப்
புரந்துகொடுத்தவர் தேர்பொருளாயே
வரங்களுமுற்ற வளித்தவரத்தால். (சு)

---

* மனைத்த-என்றதற்குப்பொருள் நன்னூலில் பழையனகழி லும் புதியனபுகுதலும் வழுவலகாலவகையினனே என்னுஞ் சூத்திரப்படி வனைத்தவென்று கொள்க.

மற்றவர்நெஞ்சின் மயக்கிருளெல்லா
மற்றபின்ஞான விளக்கொளியாலே
பற்றறுவிப்ப னெனப்பழையோன்முன்
கொற்றவன்மற்றிது கூறவலித்தான். (எ)

வேறு.

பேதமுடையபிறப்பகன்றுன் பிறழாநிறைவுபெருஞ்செல்வ
மாதிதேவன்பரப்பிரம மழிவில்லாதானுரணங்க
ளோதவரியவுத்தமனிங்கெல்லா முயிர்ப்பானெனவுன்னை
நீதிமுனிவருரைத்தவெல்லா நீயேயருளிச்செய்தனையால். (அ)

எல்லாப்பொருட்குந்தனித்தே யெல்லாப்பொருட்குமீசனே
நல்லார்புகழுந்தேவர்கட்கு முலகங்களுக்குநாயகனே
யல்லாலறிவாரானொன்னை யானேயறிவனெனவருளுஞ் [தேன்.
சொல்லாலுளவப்பொருளெல்லா மெய்யேயானுந்துணிந்தொழிந்

வேறு.

மெய்வகையவுலகினிடை வேறுவேறாய்நிற்ப
தெவ்வகையவுருவமுனைச் சார்ந்ததெனவறிகிலே
னவ்வகையவெப்பொருளு மொளியாமலடியேனுக்
குய்வகையநெறியாகவுரைத் தருளென்றேயுரைப்பான். (கo)

பருகாநின்றேற்குனது திருவாக்காம்பராவமுத
மொருகாலுமார்கின்றிலே யடியேற்குரையென்ன
வருகாலநிகழ்காலஞ் செல்காலமென்றிவற்றிற்
பெருகாதகுறையாத பெருமாயன்பேசுவான். (கக)

வேறு.

இறந்தவென்விபூதிக்கோ ரெல்லையின்மையிற்
பிறந்தனமுடிவுறப் பேசவொண்ணுமோ
வறந்தருமனத்தின யவற்றிலேசில
சிறந்தனகூறுவ னென்றுசெப்புவான். (கஉ)

வேறு.

ஓதிற்பெருகும்பூதங்கட் கெல்லாமிதயத்துள்ளுயிர்நான்
பேதித்திடுமிப்பொருட்கெல்லாம் பிறப்புநிலைகேடாவேனு
நாதித்தியரில்விட்டுணுநான் மருத்துவரின்மரீசியுநான்
சோதிக்கதிரிலிரவியங்கி யென்றுசொல்லப்படுவேனுன். (கங)

வேறு.

சந்திரனுனன்மீனிற் சாமநான்மறைகளினி
லிந்திரனன்றேவர்களி லிந்திரியங்களின்மனநா

னெந்திரமாமுருவுகளிற் சேதனனுனுருத்திரரின்
மந்திரமாஞ்சங்கரனு னியக்கரில்வைச்சிரவணனுன். (கச)

மலைகளின்மாமேருவுநான் வசுக்களிற்பாவகனுநான்
றலைவர்களிலறுமுகனுன் சலநிலையிற்சாகரநான்
நிலையமிலாயாகத்திற் செபயாகமாவேனு
னிலையுடையவெனுமிவற்றி லிமவானுய்நின்றேனுன். (கரு)

பெருமுனியிற்பிருகுவுநான் புரோகிதரிற்பிரீதகனுன்
மருவியவாக்கவற்றோநான் மரங்களில்வைத்தாசுநான்
பொருவரியநாரதனுன் புத்தேண்மாமுனிவர்களிற்
றிருவியல்கந்தருவர்களிற் சித்திரத்தேரவனுநான். (கசா)

சித்தர்களிற்கபிலமுனி திரைகடலிலேபிறந்த
வுத்தமாம்புரவிகளி லுச்சைச்சிரவமுநானே
யத்தமுடைவிலங்குகளி லியானையிராவதமாவேன்
வித்தகமானுடப்பிறப்பில் வேல்வேந்தராவேனுன். (கஎ)

வேறு.

படைகளில்வச்சிரம் பாம்பில்வாசுகி
யடைவருமனந்தனு காசர்தங்களிற்
கொடைபயில்சுரபி கோகுலத்திற்கூறிய
வடைவொடுமிவையெலா மியானென்றேயறி. (கஅ)

வருணனுமியமனும் வரவிலாளியும்
பெருமைசெய்யசுரரிற் பிரகலாதனு
மிருமையினெண்ணுவா ரெண்ணுமியானெனச்
செருமலிதோளினுய் தெளியத்தேறுவாய். (கக)

பொராவருங்கருடனுன் புள்ளின்மாக்களின்
விராவருமடங்கனுன் வாயுவேகநா
னிராமனனெறிபடை வீரர்தங்களிற்
காமுநான்மீன்களி லாற்றிற்கங்கைநான். (உ०)

வேறு.

பெண்களிற்புகழ்திருச் சொன்மேதைபொறைதிண்மை பேசு நினைவென்னவே, யெண்பகுத்தவெழுவோரு நானிருதுவாறில்வந்த விளவேனிறு, னண்பகற்பெரியசாமனுனுரிய சாமமேழினுநலத் திறனுன்,மண்களிப்பவருதிங்களிற்புகழ நின்றமார்கழியுமற்றுநான்,

வேறு.

கல்லாருந்தோளினாய் கவிகளிற்காயத்திரிநான்
றெல்லாயங்களிற்சூது துணிவார்பாற்றுணிவுநான்
வெல்வார்பால்வெற்றிநான் மிகுதிறலோர்பாற்றிறநா
னல்லார்பானன்மையுநான் ஞானிகள்பான்ஞானமுநான். (உஉ)

வேறு.

மிக்கசொற்றொகையனைத்துநானரிய விச்சையிற்பிரம விச்சைநா, னக்கரங்களிலகாரநானளவில் காலநானதுவுமின்றியே, தக்கதொகைதுவசமாசநானிருவினைப்பயன்கடருவேனுநான், மிக்கமன்னுயிர்களைக்கொல்வேனுமவை யுற்பவஞ்செய்திடுவேனுநான். (உங)

வேறு.

கண்ணனுநானியாதவரிற்கவிகளில்வித்துசனனுநான்
றண்ணளிசேர்பாண்டவரிற் றனஞ்சயனுநானின்றேன்
விண்ணவர்கோமுனிவர்களில் வேதவியாதனுநானே
யெண்ணரியமறைவுகளி னியம்பாமையாவேனன். (உச)

வேறு.

இரும்புவனமனைத்திறுக்கும் வித்துநானெனைப்போக்கியாதுமில்லை, வருந்தினுமென்பெருமைக்கு வரம்புரைக்கமுடியாது வகுத்துச்சொன்னோம், பெருந்திருவையுடையனமெய்ப் பெருமுயற்சியனவென்று பேசுமிந்த, வரும்பொருள்களனைத்துமென தொளியிலுல்வருவனவென்றறிதிநீயும். (உரு)

வேறு.

பலவினியுரைத்தெனிந்தப் பல்லுயிரனைத்துமெல்லா
வுலகமுமொடுங்கிநிற்ப தென்னிலோரிடத்தினுள்ளே
கலவலனவற்றோடென்றான் கஞ்சனுருயிர்போய்த்துஞ்ச
வலைகடல்வளராதேபேர்ந் தாயர்பால்வளர்ந்தபெம்மான். (உசு)

பத்தாவது

விபூதியத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உககூ.

---

பதினோராவது

# விசுவரூப அத்தியாயம்.

சுருளார்கின்றதுழாய்முடியாய் சொல்லுமனமுந்தொடர்வரியா
யுருளார்சகடமிறவுதைத்தா யுயிர்கட்கெல்லாமுள்ளுயிரே
யிருளார்பவத்தேகிடந்துழைக்கு மென்பாலிரங்கிநீயிசைத்த
வருளாரமுதென்செவிகளா லாரப்பருகியயர்வொழிந்தேன். (க)

தெரியாவகைநீயெங்கு மாய்நின்றவந்தத்திருக்கோல
மரியாய்மெய்யேயடியேற்குங் காணலாமோவெனவன்பாற்
பரியாநின்றசிந்தையொடும் பார்த்தன்வினவப்பழமறைதேர்
கரியானவனுக்கப்பரிசே காட்டவேண்டிக்கட்டுரைப்பான். (உ)

வேறு.

எண்ணினியற்கைய தெண்ணிறைந்தது
பண்ணியொருத்தர் படைத்தறியாதது
விண்ணினியற்கை சுருங்கவிரிந்தது
கண்ணினளப்பரி தாயதுகாணாய். (ந)

மருத்துவர்சூரிய ரட்டவசுக்க
ளுருத்திரரொன்னிடை யேயுளரியாரு
மருத்திசெயற்புத மாயவனேகங்
கருத்துறவென்னிடை யேயுள்காணாய். (ச)

என்றருளிச்செய்த வன்கணிரண்டு
நன்றறிகிற்கென ஞானமளித்திட்
டன்றவனுக்கருள் செய்வகையேயாய்
நின்றவருக்கறி யாவகைநின்றான். (ரு)

வேறு.

பரிந்தினியுரைப்பதெ னவன்படிவமேயாய்
விரிந்ததுலகெங்கணும் விளங்கொளியினாலே
யெரிந்தனதிசைப்புறம தின்னதெனவேதுந்
தெரிந்ததிலவானவர்க ளானவர்திகைத்தார். (சா)

வேறு.

அங்குமால்கொள்கோலமிங் களந்துகூறலாகுமோ
கொங்குண்மாலையாடைசாந்து கொண்டகோலமேவியே

யெங்குமாகியெல்லையின்றி யெண்ணில்கோடிபல்கதிர்
மங்குல்வானில்வந்துதித்த தொக்குமற்றதன்கணே. (எ)

வேறு.

ஏய்வகையதாள்களொடு தோள்களுமனேகஞ்
சாய்பெறவணிந்தவணி தானுமுளனேகம்
வாய்களுமனேகமொளிர் வாண்முகமனேகம்
மாயுதமனேகமெழு மற்புதமனேகம். (அ)

அவ்வகையமாயனமர் கோலமதனுள்ளே
யெவ்வகையவாயபொரு ளியாவுமெதிர்காணு
வுய்வகையனுகின னொருவுவகைகூரச்
செய்வதறியாவிசய னிவ்வகைசெய்தானல். (கூ)

தொழும்புகழுமெய்மயிர் துளக்குமுயிர்சோரு
மெழும்புவனமேழு மவனன்றியெதிர்காணன்
விழுங்கதுறுவானென விரும்பிமெய்மயங்கா
வழும்பரியுமென்செய்த னனென்றறிகலாமோ. (கo)

அஞ்சுமெய்நடுங்கு மிகவன்புறுமனத்தே
நெஞ்சுமறிவுங்குழைய நின்றுதொழுநேரோ
யுஞ்சுகரைகண்டன னொருவுவகைகூரும்
வெஞ்சுடர்கொலென்றன வியக்கும்வியனெய்தா. (கக)

மண்ணுறவணங்குமயிர்க்குச் செனநிரைக்குங்
கண்ணுமனமுங்கரைய நின்றுகைமுகிழ்த்தே
யெண்ணுமுலகுங்களை யுமியாவரையுமேறுட்
பண்ணுமவன்முன்புசில நின்றுபகர்வுற்றான். (கஉ)

வேறு.

தேவரும்வணங்குதேவ நின்றிருக்கோலத்துள்ளே
யாவருமெல்லைகாணாப் பெருளெலாமிசையக்கண்டேன்
மூவராமுதற்புத்தேளை முனிவர்களோடுங்கண்டேன்
மேவருநாகங்கண்டேன் விண்ணவர்குழாமுங்கண்டேன். (கங)

கண்களும்வயிறுந்தோளு முகங்களுங்கருதிநோக்கி
லெண்பலவுடையவாய வுருவுகளனேகங்கண்டேன்
றண்கதிர்முடியுந்தண்டுஞ் சக்கரப்படையுமேந்தி
யொண்கதிர்கனலோடொன்று யணையநின்னுருவினுள்ளே. (கச)

வேறு.

இந்தவுருவென்ன வுருவென்றறியுகில்லே
னந்தமறியேனடுவு மாதியுமனைத்து
நந்தலறியாததனை நான்மறைபுநாடித்
தந்தபொருளாயதனை மாயைதருசார்பை. (கரு)

என்றுமுளதாயதை யியற்றருமமெல்லா
நின்றுபிறழாவகை நிறுத்துநெறிவாழ்வைச்
சென்றுகுறையாததனை யென்பழையசேவைக்
கன்றுதொடராப்பரிசு நின்றெனெதிர்கண்டேன். (கசு)

வலந்தருதிறத்தொடு வருங்கதிரிரண்டே
யலர்ந்தெழவிழிப்பதை யடுங்கனனெருப்பை
மலர்ந்தெழுமுகத்ததை மயங்கவுலகெங்குங்
கலந்துசுடலுற்றதை வியந்தெனெதிர்கண்டேன். (கஎ)

நிலத்தினெடுவானுற நிமிர்ந்துதிசைநேர்போய்
விலக்கமறநீயுனது மேனியைவிரித்தா
லலக்கணடையாதவர்க ளாரடையவையா
கலக்கமுறுகின்ற வுலகங்களிவைகாணாய். (கஅ)

வணங்கவிமையோர்களரு மாதவர்வழுத்தக்
கணங்கொடுவியந்துபுகழ் சித்தர்தொகைகண்டே
னுணங்கவுயிர்தானவர்கள் கந்தருவருள்ளோ
ரிணங்கியினதென்றறி கிலாரையெதிர்கண்டேன். (ககூ)

வானடையவிம்மிவரு ணம்பலவுடைத்தாய்ப்
பேய்நடையவாயபிறை போலெயிறுபேழ்வாய்
தானுடையவாயபன் முகம்பலதழைக்கும்
யானடையலாம்வகைய தன்றிவுருவெந்தாய். (உ0)

வேறு.

தஞ்சமிவ்வுலகுக்கெல்லா மாய்நின்றதன்மைகண்டே
னுஞ்சினனெனினுமற்றுன் னுருவுறக்காணக்காண
நெஞ்சமுநடுங்காநிற்க நிலையிலதிசையுங்காணே
னஞ்சலென்றருளவேண்டு மகிலமுமாயவெந்தாய். (உக)

நூற்றுவர்தாமுந்தங்கள் சேனையுமவர்கட்காக
வேற்றெதிரரசர்தாமு மென்படைதானுமுன்றன்

கூற்றுறழெயிற்றிற்பட்டுக் குறையுடலாகாநின்று
காற்றுறுதீயினன்ன முகங்களில் வீழக்கண்டேன். (௨௨)

ஓதருநதிகளெல்லாங் கடலடைந்தாற்போலுன்னிற்
போதருபொருள்களெல்லா நின்னுளே புகுதக்கண்டேன்
தீதனில்விட்டில்பாய்ந்தாற் போலநின்முகங்களுள்ளே
மாதவவுயிர்களெல்லாம் வீழ்ந்துமாய்குனவுங்கண்டேன். (௨௩)

ஒளியினாலுலகமெல்லா மொழித்தனவயூண்போதாமல்
வெளியினாநீட்டிநீட்டி வெறுஞ்சுவைகொள்ளாநின்றாய்
தெளிகிலேனுன்னையுன்றன் செய்கையுந்தெரிக்கமாட்டே
னளியினாலடியேற்குன்னை யுள்ளவாறருளிச்செய்வாய். (௨௪)

என்றவன்வணங்கிக்கேட்ப யாவுமாயெல்லையின்றி
நின்றவனுரைப்பானுன்னை யொழியநின்றவரையெல்லாங்
கொன்றுயிர்பருகலுற்றேன் கடையுகங்குறுகலுற்ற
வன்றுலகடையமாய்க்கு மவனியானறிநீயையா. (௨௫)

வேறு.

இறந்தாரோயெனக்கருதிங் கிவர்களெலாமென்னாலே
யறந்தானுமறுநீயே யாங்கவரைக்கொன்றாயாற்
சிறந்தாயவரசினையுஞ் செயத்தினில்வாழ்திருவினையும்
பிறந்தார்கள்பெறாதபெரும் புகழினையும்பேணென்றான். (௨௬)

வேறு.

இவ்வகைமொழியக்கேட்ட விசயனென்செய்தானென்னிற்
கைதலைமிசையவாகக் கட்டுரைகுழறக்கண்ணீர்
பையவேநெஞ்சிற்றேறப் பயத்தொடும்பரிவினோடு
மைவரையெடுத்தவள்ளல் பெருமையைவழுத்தலுற்றான். (௨௭)

வேறு.

ஞானமுதலிந்தியங்க ளனைத்திற்குநாயகமே
யூனவினைத்தளையறுப்பா யுன்னுடையபுகழ்கேட்கில்
வானவருஞ்சித்தர்களு மனங்களித்துமகிழ்வெய்தத்
தானவருமரக்கர்களுஞ் சாய்ந்துயரப்படுவர்களால். (௨௮)

கையும்பதமுந்திருவாயுங் கண்ணுஞ்செய்யகருமுகிலே
யையைம்பொருளுமறிவரியா யயனார்தாயேயந்தமிலாய்
மெய்யும்பொய்யுமில்லாதா யெல்லாமாகிவிரிந்தாயே
யுய்யும்பரிசுநினைந்தவர்க ளுன்னைவணங்காதவருளரோ. (௨௯)

ஆதிதேவனுவாய்நீ யாக்கைக்கமைந்தவாருயிர்நீ
யேதுமறியப்படாமையுநீ யெல்லாங்கடைக்காற்புகலிடநீ
யோதியுணர்கின்றாயுநீ யுணர்வாலுணரப்படும்பொருணீ
நீதியமனுயழிப்பாய்நீ நீருங்காற்றுமாவாய்நீ. (௩௦)

ஏயும்பரிசிவ்வுலகெல்லாமென்றும் பிறப்பித்திடுகின்ற
தாயும்பிதாவுமாவாய்நீ தாய்தாய்தந்தைதாதையுநீ
யாயும்படியேயல்லாதவை யாவுன்னையடியேனென்
மாயும்பிறவித்துயர்தீர நூறாயிரக்கால்வணங்கினேன். (௩௧)

என்பேரிடும்பைகெடும்வண்ண மின்னந்தொழுதேனெந்தாயுன், முன்பேதொழுதேனுன்னுடைய பின்பேமுறையால்வணங்கினே,னன்பேயடியேனருயிரோ யகலாவிந்தப்பெரும்பிறவி, வன்பேகெடவுன்றனை யெங்கு மறித்துமறித்தும் வணங்கினேன். (௩௨)

வேறு.

தேவதேவநின்னில்வேறு தேவரோதுதெய்வமேது
பாவமேதறங்களேது பற்றியாதுவீடியாது
சாவதேதுவாழ்வதேதனைத்துமாயதன்மைநீ
யாவதேதுமொன்றுநானறிந்திலேனென்மாயனே. (௩௩)

நீதிவேதம்வானுளோர் நிலத்துளோர்நினைந்துனைத்
தோதியோதியுட்கசிந் துணர்ந்துமுன்னைமுன்னமே
சாதிபேதமாகிவாழ் சராசரங்களுக்கெலா
மாதிமூலமென்றுநானறிந்திலேனென்மாயனே. (௩௪)

சாயைபோலும்வாழ்வுமாடு வீடுதந்தைதாயெனும்
பேயையேறிமாறியே பிறந்திறக்குமீதெலாந்
தாயையாகியாதுமோர் தொடக்கிலாதுநின்றநின்
மாயையாவதென்றுநானறிந்திலேனென்மாயனே. (௩௫)

யாதவாவென்மைத்துனா வடாவசோதையின்னுயிர்க்
காதலாயகாலியாய கண்ணகண்ணவென்றுநா
னேதலாவதன்றியே யுரைத்ததீமையாவையு
மாதகாதவென்றுநானறிந்திலேனென்மாயனே. (௩௬)

ஏறுமல்லுவென்றுகுன் றெடுத்தவண்ணமெண்ணியே
கூறுமல்லதீரவும்பர் கூறுகின்றகொண்டலே
வேறுமல்லையொன்றுமல்லை மெய்மைகூறுமப்பொரு
ளாறுமல்லையென்றுநானறிந்திலேனென்மாயனே. (௩௭)

வேறு.

என்னுடையதோழனென வேகருதியாது
முன்னுடையமேன்மையினை யொன்றுமுணராதே
வன்மையினினின்மொழி மறித்தெதிருரைத்த
புன்மொழிகளானவை பொறுத்தருளுகண்டாய். (௩௮)

உண்ணல்விளையாடுத லுறங்குதல்சிரித்தல்
பண்ணனுறுபோது களினும்பழமையாலு
மெண்ணலறியாமையினில் வந்தபிழையெல்லாங்
கண்ணகருணாகர பொறுத்தருளுகண்டாய். (௩௯)

வேறு.

உண்டாயவுலகனைத்து மீன்றாய்நீயே யெவராலுமுன்னுண்மையுணர்ந்துகூறிக், கொண்டாடப்படுவாய்நீமெய்மை நல்கிக்குருவாகிக்குற்றங்கடீர்க்கின்றாய்நீ,யென்றாலுமறையனைத்துமுன்னின் மிக்கா ரில்லையெனநின்றேறுவெடுத்துக்காட்டக், கண்டாலுநின் பெருமைகாணமாட்டார் கண்ணிலாதவர்வேறுகாண்பதுண்டோ.

அறியாதபருவத்துமகன்செய்குற்ற மருந்தாதை பொறுத்தனவுமாவிபோலப், பிரியாததோழன்செய்குற்றநட்பிற் பெரியோர்கள்பொறுத்தனவும்பேதையேனுய்க், குறியாதுசெய்துவருங் குற்றமெல்லாங் குணமாகக்கொண்டருளவேண்டுமென்றே, வெறியாருமலர்ப்பதங்களிடையேவீழ்ந்து வேண்டிக்கொண் டிவையின்னம் விளம்பலுற்றான். (௪௧)

வேறு.

பண்டுகண்டறியாப் பழங்கோலத்தைக்
கண்டுநெஞ்சங் கலங்கிக்களிக்குமாற்
றண்டுநீண்முடி சங்கொடுசக்கரங்
கொண்டகோலத்தையேகொண்டருளுவாய். (௪௨)

வேறு.

என்றவனுரைத்திடலு மெவ்வுருவுமொன்றாய்
நின்றவனுரைத்தருளு வானிறையொளித்தாய்
முன்றருமுதற்பொருளு மாய்முழுதுமாய
வென்றனுருவத்தினைமுன் யாவரறிகிற்பார். (௪௩)

வேதநெறியாலுமிகு வேள்விகளினாலு
மாதவமதாலுமகிழ் தானவகையாலுங்

காதலர்கள்காணமுடி யாவடிவுகண்டா
யேதமறியாதவெனை யோகவலியாலே. (சச)

இப்பரிசுரைத்தருளி யீரிருகையேயா
யப்பழையகோலமது வாயருளியங்கே
மெய்ப்பயமகற்றிவிச யற்கிசையவேறே
யொப்பவரின்மிக்கவ ரிலாதவனுரைப்பான். (சரு)

வேறு.

கண்டவரில்லைநீமுன் கண்டவிக்கோலங்காண
வண்டருமறியாநின்று ராதலாலன்புகூருந்
தொண்டருமாகியென்னை யன்றியோர்தொடக்கிலாமை
கொண்டவரடைவரொன்றுன் கோகுலமேய்த்தகோமான். (சசா)

பதினொராவது
விசுவரூபவத்தியாயம் - முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் நூசரு.

---

பன்னிரண்டாவது

## பத்தியோக அத்தியாயம்.



ஏயநானெதிரேகண்ட வுருவமேயிசைகிற்பாரோ
தூயநான்மறைக்குமெட்டாப் பொருளையேதொடர்கிற்பாரோ
தாயனுய்பெரியோரொன்று தனஞ்சயன்வினவத்தானே
ராயனுய்நிரைகண்மேய்க்கு மாயன்வேறருளிச்செய்வான். (க)

மன்னநீகாணநான்முன் காட்டியவடிவைநெஞ்சா
லுன்னல்வாய்மொழியினாலே யுரைத்தல்செய்பவர்களெல்லா
மென்னலாற்பிறிதொன்றெய்தாரி யாரினுநல்லரிங்குச்
சொன்னவரன்றிமற்றை யவர்கடந்துறையுங்கேளாய். (உ)

உரைசெயற்கரிதாய்நெஞ்சினுணர்விடப்படாதாயெங்கும்
புரையறக்கலந்துபோக்கு வரவின்றிப்பொலிந்ததொன்றைக்
கரைசெயற்கரியவாய புலன்களைக்கடந்துகாண்பா
ரரசமற்றியானேயென்னி லன்னியமென்னலாமே. (ங)

காரணமிறந்தொன்றிற்குங் காட்சியிற்படாததொன்றைச்
சேர்பவர்வருத்தம்வேறு செப்பிடலாவதன்று
லோர்வரிதிதுதான்வாழு முயிர்களாலாவதொன்றே
வாரவர்பெருமைதன்னை யளவறுப்பவர்களையா. (ச)

யாவர்கள்சிலவுமொல்லா வினையுமென்கண்ணேவிட்டிட்
டியாவர்தமறிவென்பாலே யாக்குவாரவர்கடம்மைச்
சாவதுமுதலாயுள்ள துயர்க்கடலின்றுந்தாங்கி
யாவர்களேனுங்காலஞ்சிறிதிலேயெடுக்கின்றேனான். (ரு)

வேறு.

மெய்யுறவுன்னையென்னிலே வைத்தா லென்னில்வேறின்றி யொன்றுதற், கையுறவில்லையதுமுடியாதே லாயினுமதனையேபயில்வாய், பொய்யறவதுவும்புரிகிலாயெனினுன் வினைகளென்பொருட்டினாற்புரிவாய், செய்யுமவ்வினைகளப்படிச்செயாயேல் வினைப்பயன்றவிரவேசெய்வாய். (சு)

வேறு.

அத்திஞானம் வினையினதனினு
மெத்தியானமிரு மதின்மேலவாம்
வித்திறையவினைப்பயன் வீடுதல்
சித்தசாந்தியதனினுஞ் சீரிதால். (எ)

வேறு.

இருவகையுயிர்க்குமினியனாயின்பதுன்ப மியானின்னதென்றறியா, தொருபொருளாலுங்குறைவுபாடின்றி யுள்ளமுமொருவழிப்படாப், பொருவருந்துணிவுங்கருணையும்புரிந்து புலன்றெரியுணர்வையென்பாலே, மருவினின்றொழுகுமியோகியென்பவன் காண்மன்னமற்றெனக்குவேறினியான். (அ)

உலகமுந்தானும்வேறிலாமையினாற் றொருபொருட்குமஞ்சாதே, யலகிலாவுயிர்கட்கினியனாதலினா லவைகளுந்தன்னையஞ்சாதே, புலவரானவர்கள்புகழவேநிகழ்வான் பொருமையுமயக்கமுங்களிப்பு, மிலகிடாநெஞ்சத்தியோகியென்பவன் காணியாரினுமெனக்குவேறினியான். (கூ)

ஒன்றினுமாசையின்றியிந்தியங்கடன் வழியொழுகிடாதொடுக்கி, நன்றியினோடுதீங்கினிதொத்து நல்வினைதீவினைதுறந்து, பொன்றினுநோவுற்றழிதல்செய்யாதே பூரித்தல்வாடுதலின்றி, யென்றுமுன்பிழந்தபொருட்கிரங்காதே வரும்பொருட்கிச்சைசெய்யாதே.

வேறு.

இகழ்பவர்நட்டாரென்பதின்றியேயின்பதுன்பந்
திகழவமானமானஞ்சீதமோடழலின்றீமை
புகழ்பழியிவற்றுளொத்துப்பொருந்திவாழிடமொன்றின்றி
திகழ்தரும்யோகிகண்டாய்மற்றெனக்குரியநீரான், (கக)

செயத்தகுவதுவுமாகிச்சேர்ந்தவர்செல்லறீர
வுயக்கொடுபோவதாயபொருளையானுரைத்தவண்ண
மியற்படவுணர்கிற்பாருக்கியான்மிகவினியனென்றான்
மயக்கறவொருவராலுமறிவரிதாயமாயோன். (௧௨)

பன்னிரண்டாவது

பத்தியோகவத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௫௭.

---

பதின்மூன்றாவது

## சேத்திர சேத்திரக்ஞ அத்தியாயம்.

விடம்படுபணமுடியரங்கின்மிசையேறி
நடம்பயிலுநாயகன்மறித்துமிகுஞானஞ்
சடம்படுபிணிப்பிறவியென்றிவைதரிக்கு
முடம்பொடுயிரானவையுரைத்தருளலுற்றான். (௧)

உடம்பெனவுரைப்பதுயிருண்பவைகளெல்லா
மிடம்படவிளைப்பதெதிர்காணலுறுமீதாற்
றிடம்படவுமற்றிவைதெரிந்துணருமெய்யைக்
கடம்படுமுயிர்ப்பொருளெனப்பகர்வர்கற்றோர். (௨)

மன்னவுடலியாவையினுமன்னியறிவாய்நின்
றுன்னுமுயிரியானிவையிரண்டினையுமோர்காற்
றன்மையினையாதறியுமற்றதனைஞான
மென்னவுணர்வாயிதுவெனக்குமிசைவாமால். (௩)

மற்றிவுடறன்னில்வரவுங்குணமும்வந்தாங்
குற்றமைவிகாரமுமுயிர்த்தொகுதிதானு
நற்றவர்கள்வேறுபடவோதினர்களுனுஞ்
சொற்றொகையினாலிவைசுருங்கமொழிவன்கேள். (௪)

எப்பொருளினும்பெருகி யெங்குமுளவாகு
மப்பெரியபூதமவையைந்துமவையீனு
மொப்பரியநானுமதுவந்துமுனுதிக்கப்
பொய்ப்பகையில்புந்திமனனென்றபொருடானும். (௫)

காதலிவ்வெட்டும்வினை காரணமுமொன்று
யோதவரிதாயபுலனைந்துமவையுண்ணு
மாதலறியாதபொறியைந்துமவையாலே
யேதவினைசெய்கரணமூன்றினொடிரண்டும். (௬)

இற்றிவையனைத்துமிடரின்பமுதலியாவுந்
துற்றமைவிகாரதைதொடர்ந்ததொகைகண்டாய்
நற்றவவுடம்பெனவியம்புவதுநல்லோ
ருற்றவுடலுக்குரியஞானமுமுரைப்பாம். (௭)

வேறு.

மானமும்பிறர்தனைமதிக்கப்பண்ணலு
மூனமும்பிறவுயிர்க்குறுகண்செய்கையும்
யானெனுஞ்செருக்குமிவ்விகபரங்களி
லானபேராசையோடறுக்குமாற்றலும். (௮)

பெற்றநன்மனையொடுபெண்டிர்பாலர்பா
லுற்றெழுமவாவிடலுடம்பின்றூய்மையு
மற்றவைம்பொறிகளின்வாயில்வாழ்க்கையுஞ்
செற்றமுஞ்சிறியவர்குழுவுந்தீர்தலும். (௯)

ஒருபெரும்பொருளையேயுளத்துள்வைத்தலு
மிருவினைகடப்பவரிடங்களெய்தலுங்
குருவினைவழிபடுகுணமுங்குற்றமி
லுருவினையுள்ளவாறுணருமுண்மையும். (௧௦)

மூன்றிகழ்பிறப்பொடுமூப்பிறப்பினாற்
சென்றடையிடும்பையைச்சிந்தைசெய்கையு
மென்றிவையனைத்துமற்றிவற்றினாலினிச்
சென்றடைபொருளினைத்தெரிந்துகேளெனா. (௧௧)

வேறு.

ஆதியந்தமிலதழி யாதுநின்றபெருமைய
தோதிலுண்டிலையெனுமூனமின்றியொளிர்வது
நீதியின்கணகிலமுமாகியெங்குநிறைதலி
னோதருங்கைசெவிதலைகால்களெங்குமுடையது. (௧௨)

வேறு.

பூதமைந்தினகத்தினொடுபுறத்தினும்பொலிகின்றதிங்
கேதமின்றிநடப்பநிற்பனவாயிருப்பதின்னதென்

ஞேதரும்படிநுண்ணிதாகியதொன்றதாகியிருந்துமெய்ப்
பேதம்வந்ததுபோலநின்றுபிணங்கவும்படுகின்றதே. (௧௩)

வேறு.

காணும்புலன்களனைத்தினுக்குங்கண்ணாய்நின்றுகாட்டுவது
பேணும்புலன்கடனக்கொன்றுமில்லாதியன்றபெற்றியது
பூணும்பற்றுந்தனக்கின்றியெல்லாந்தானேபொறுக்கின்ற
தாணும்பெண்ணுமாங்குணமுமன்றியெய்க்குமாகியது. (௧௪)

வேறு.

அருவமாயதிதூரமாயதனைத்துமாயதணித்துமா
யுருவமியாவுமளித்துமீளவொழிக்குநாளிலொழிப்பது
பொருவிலாவொளிகட்குமுள்ளொளியாகியேபொலிகின்றதிங்
கிருமைவீடியஞானமோடதின்ஞேயமாகியிசைந்தது. (௧௫)

ஆனவிப்பொருண்முன்புரைத்தவவற்றினாலறியும்பொரு
ளூனமற்றமனத்தினாய்நல்லுடம்புமற்றவுடம்புசேர்
ஞானமுற்றுமவற்றினாலறியப்படும்பொருணன்மையு
மீனமற்றதிறத்தினோடுசுருக்கமாகவியம்பினேன். (௧௬)

எள்ளலானதிகந்துயான்முனுரைத்தவிப்பொருளிதெலா
முள்ளவாறுதெரிந்தெனன்பர்தமக்குணர்ந்திடவோதினோர்
கள்ளமார்தருமாயவேலைகடந்துகாதல்செய்யின்பமாம்
வெள்ளமாமெனையெய்துவாரெனவேறுகூறவிரும்பினான். (௧௭)

வேறு.

ஓதியவுடம்பிற்கு முயிர்க்குமுண்மையா
யாதிகண்டறிபவரி யாருமில்லையாற்
றீதிலிவ்விரண்டுமுன் செய்வதென்னெனி
னீதியிலிவற்றையு நிகழக்கூறுவாம். (௧௮)

நண்ணியகுணத்தின் வேறின்மைநாட்டலாற்
கண்ணியவினைகளுக் குடம்புகாரண
மெண்ணியதுன்பமோ டின்பமென்றிவை
யுண்ணியகாரண முயிரொன்கின்றதே. (௧௯)

இவ்வுயிரிவ்வுடம் பிதனிலேயிருந்
தவ்வுடல்பயத்திடுங் குணங்களானவை
துவ்விடுமிறந்திடுந் தோன்றுமிக்குண
மெவ்வாறானுடையன வென்றிருத்தலால். (௨௦)

உண்பனையாவையு முண்கின்றனுமெய்க்
கண்கொடெப்பொருளையுங் காண்கின்றனுமென்
னண்பவெப்பொருட்கு மொத்திருக்குநாதனு
மெண்செய்திவ்வுடம்பி லேநின்றவீசனே. (உக)

இப்படியுயிரையு மியாக்கைதன்னையு
மெய்ப்படவறிந்தவன் வேட்டவேநுகர்ந்
தொப்பரவன்றியே யொழுகிவாழினும்
பொய்ப்படுபிறவியின் மறித்தும்போகலான். (உஉ)

செறியுமிப்பொருளினைச் சிலர்தியானமாங்
குறியினற்றம் முளேகண்டுகொள்வர்க
ளறிவருஞ்சாங்கிய யோகமாகிய
நெறியினுமொங்குமாய் நிற்பக்காண்பரால். (உங)

இருமையுமறிவதற் கிடமிலாதவ
ரொருமகன்றெய்வ மென்றுரைத்தவொன்றையே
யருமையிலருச்சனை செய்வராலதன்
பெருமையிலவர்களும் பிறவிமேவிடார். (உச)

போவனநிற்பவாமி யாக்கைபூண்டுகொண்
டியாவருந்துயர்ப்படு கின்றவீதெலா
மேவருமுடலுயிர் வேறுபாட்டினை
யாவர்கண்டறிவதோ ரறிவிலாமையே. (உரு)

வேறு.

கெடுகின்றபூதங்க டோறுங்கெடாதே
வடுவின்றிநின்ற மறைப்பொருடன்னை
நடுவென்றுகண்டவ னல்லனவெல்லாங்
கடுகின்றுணையொழியா வகைகண்டான். (உசா)

ஒத்தெங்குமாய வொருமைப்பொருளினை
யத்தன்மையினுலறியு மவனே
செத்தும்பிறந்துந் திரியாவகைதன்னை
மெய்த்தன்மையிலேபுகவிடுகின்றுன். (உஎ)

வேறு.

உணர்வவிகாரியென்றும் வினையெலாமுடம்பின்றேடே
புணர்வனவென்றுங்கண்டான் பொய்யிலாமெய்யைக்கண்டா

னீணர்மலர்முடியாயெல்லா வினைகளுஞ்செயினுமான்மாக்
குணமிலியாதலாலே யவற்றொடுங்கூடியில்லான். (உஅ)

உன்னியவானமெங்கு மொழிவறநிறைந்ததேனுந்
தன்னுடை நுண்மையாலே பிறவொடுஞ்சார்ந்தலுண்டோ
பன்னியவிதுபோலெங்கும் பரந்துளனெனினுமங்கு
மன்னியவீசனந்த வுடம்பொடுமருவமாட்டான். (உகூ)

இரவிதானொருவனேயாய் நின்றிந்தவுலகத்தெங்கும்
விரவியவிருளை நீக்கி விளங்குறுமாறுபோலத்
தரவியாவருமுன்னில்லாச் சராசரவுடம்புதோறும்
பரவியானுமாத்தமாயோ னொருவனேபரந்துநிற்பான். (௩௦)

ஓரின்மேலாகின்ற வுயிரினோடுடம்புக்குள்ள
பேரினோடிறப்புமூப்புப் பிறப்பெனுமிவற்றைவேறாய்ப்
பாரின்மேலறிவார்வீடு பற்றினரொன்றுன்பார்த்தன்
தேரின்மேனின்றவேதச் சிரத்தின்மேலிருக்குஞ்சீரோன். (௩௧)

பதின்மூன்றாவது
சேத்திர சேத்திரக்ஞவத்தியாயம் - முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - ௩௮௮.

---

பதினான்காவது

## குணாதீத அத்தியாயம்.

செய்யமாமலர்மேலுறை செல்வியும்
வையமாமட வாளுமகிழ்ந்ததோ
ஐயன்மெய்யை யன்பாலடியோமெலா
முய்யமீளவுரைக்கத்தொடங்கினன். (க)

நல்லவாறறி வியாதினுநல்லது
வல்லதீர்தவத் தோர்க்கறிவாவது
மல்லுலாவிய தோண்முடிமன்னயான்
சொல்லன்மேயவ தன்றுணிவாயதே. (உ)

இன்னதன்மையின் ஞானத்தியற்கையா
லென்னைவந்தடைந் தாரிவ்வுலகினிற்
பின்னைவந்தடையா ரிறவாரிதன்
றன்மையாதெனி லாங்கதுஞ்சாற்றுவாம். (௩)

மூதவாவென்குண மவைமூன்றினும்
பேதமாகும் பிரகிருதிதன்னிலே
காதலால்வைப்பன் யான்கருவக்கருப்
பூதமியாவும் புலப்படுகின்றதே. (௪)

இந்தவண்ணத்தி னாலிவ்வுலகிடை
வந்தயோனியெலாம் வருவித்திடுந்
தந்தைதாயவை யீன்றளிக்கின்றதா
மந்தமாமலர் மேலயனாமன்றே. (௫)

என்றுமுன்னனங் குணமென்றியம்பிய
மூன்றுமூலப்பிரகிருதிதன்னிலே
தோன்றியுள்ளன தொல்லறிவைப்பற்றி
யூன்றிநிற்பதவற்றை யுணர்த்துவாம். (௬)

சத்துவமிராசத தாமதமென
வுய்த்துவந்தபெயரை யுடையன
வெத்துவந்து வழுந்தருகிற்பன
மெத்துவந்தவற்றின் செயல்வேறுகேள். (௭)

பற்றுமாசின்மையாற் பளிங்கொப்பது
வுற்றநல்லறிவான துண்டாக்குவ
தெற்றுமின்பமல்லாற் றுன்பமென்பது
சற்றுமில்லது சத்துவமாவதே. (௮)

ஓதுமாசையிதிற் பிறந்துள்ளது
தாதுகற்புரை யுண்ணிறஞ்சார்ந்தது
பேதுசெய்வினை யோடறிவைப்பின்னற்
கேதுவாய திராசதமென்பதே. (௯)

குறியுநீல மயக்கமுங்கோதிலா
நெறிகளான திகத்தலுநித்திரை
செறிதலானது மற்றிவற்றாற்றிண்ணென்
றறிவைமாய்க்கு மதுதமமாவதே. (௧௦)

வேறு.

உலாசெய்சத்துவ மின்பத்துய்த்திடு
மிரசதம்வினைகளோ டறிவையார்த்திடும்
புலைசெய்திவ்வழுக்கையே பொருந்திப்போர்த்திடுந்
தலைசெறிபுகழினாய் தமமென்கின்றதே. (௧௧)

வேறு.

வாழுஞ்சத்துவமற்றையவ் விரண்டையுமறைத்துத்
தாழுமற்றையவ்விரண்டுமத் தமோகுணந்தழைப்பின்
வீழுஞ்சத்துவந்தமங்களவ் விரசதம்விளைவி
னூழின்மற்றிவையிரண்டுந் தாழ்ந்தொன்றுமிக்குளவாம். (கஉ)

வேறு.

ஒத்துநல்லறிவுமிக்கயா தொருபோதப்போது
சத்துவந்தழைத்ததாகுந்தாங்கரும்வினைகளேகொண்
டுய்த்துவந்தாசைகூர லோபம்வந்துற்றபோது
மத்திமகுணமேசால வளர்ந்ததென்றறிநீமன்னே. (கங)

தக்கதுதகாதென்றொன்றைத்தானறியாதபோது
மெக்கருமங்கள்மாட்டுமிகழ்ச்சியோடிருக்கும்போது
மொக்கமெய்மயக்கத்தோடுமுறக்கம்வந்துற்றபோது
மிக்கதுதமமேயென்றுவிசயநீயறியவேண்டும். (கச)

வேறு.

தக்கசத்துவமேநிகழ்ந்தபோதிறந்தோர்தெய்வயோனிகளிலே சார்வார், மக்களிற்பிறப்பாரிராசதகுணமேவளர்ந்தபோதுடம்பினைத்துறந்தோர், மிக்கெழுந்தமமேவிளைந்தபோதிறந்தோர்விலங்குச்சாதிகளிலேவீழ்வா, ரொக்கமற்றிவற்றின்பலன்களுந்தெரியவுரைக்கின்றேனிவற்றையுமுணர்வாய். (கரு)

அருங்குணமாயசத்துவபலமாமழுக்கறவிராசதபலமாம், பெருந்துயருழைத்த றமோபலமாகும் பேதைமை பேசியமுறையே, பொருந்தியவிந்தக்குணங்கண்மூன்றாலும்பூதசாலங்களுக்கெல்லாம், வருந்திருவாயஞானமோடு லோபமயக்கமென் றின்னனவருமால். (கசு)

சத்துவமாந்தர்பரகதியடைவர்தமத்துளோரதோகதிசார்வார், மத்திமகுணத்தோராயினோர்நடுவின்மானுடப்பிறவியாய்வாழ்வா, ரித்திறமாயவுருவமேவிகாரியானவிகாரியென்றிவற்றை, மெய்த்திறனாகவறிந்தவனறிந்தப்பொழுதிலேவீட்டின்பமடைந்தான். (கஎ)

உடம்புடனிருந்தேயுரைத்தவிக்குணங்கண் மூன்றையுமுள்ளவாறறிந்து, கடந்தவன்பிறப்புமுப்பிறப்பாதியாகவேகட்டுரைக்கின்ற, விடம்புரையிடும்பையாவையுங்கடந்து வீட்டின்பம் விளைப்பவனென்றான், றடங்கடலிடையேவளர்ந்தவனவற்குவேறிதுதனஞ்சயனுரைப்பான். (கஅ)

கண்ணியவுலகிற்கடப்பரிதாயகுணங்கண்மூன்றையுங்கடந்துயர்ந்த, புண்ணியரியல்புமவர்களையறியுங்குறியையும்புகன்றருளென்ன, வெண்ணியவுலகுழலகில்வாழுயிருமிருவினையாக்கையுமாகப், பண்ணியுமழித்துமேவிளையாடும் பரமன்வேறிவ்வகைபணிப்பான். (௧௯)

வாய்மையவல்லாக்குணமவைமூன்றின்காரியமாய்வருகின்ற, தூய்மையுந்தொழிலு மயக்கமுமென்று சொல்லியதுறையிவைமூன்றுஞ், செய்மையவென்றுபெருத்தபோதிரங்கல் பெற்றபோமகிழ்தல்செய்யாதான், றாண்மையுலாகாக்குணங்களோடிருந்தே யவற்றினாற்சலிப்பிக்கப்படாதான். (௨௦)

வேறு.

மானமவமானம்வருமின்பமிடர்மண்பொன்
ஞானமகிழ்வப்பிரியமன்பர்பகையானோ
ரூனவுணாவேயாடுபுகழுற்றபொழுதொப்பா
னீனமுறுகின்றகுணமானவையிகழ்ந்தான். (௨௧)

இப்பரிசினால்வருகுணங்களையிகழ்ந்தே
மெய்ப்பருவமாயபெருவீடுபெறுகிற்பா
ரொப்பரிசினாலுமிடையின்றியொழுமன்பா
லொப்பவரிலாதவெனையுன்னுமவர்கண்டாய். (௨௨)

வேறு.

ஒழியாதென்றுமியாவர்க்கும்யானேயுணர்த்திவருதலாற்
கிழியாவறிவுங்கெடாவீடுங்கேடிலின்பமானதுவு
மழியாவறமுமென்னுள்ளேயுளவாகாநின்றனவென்றான்
சுழியாநின்றபெருவெள்ளத்திடையேபண்டுதுயில்கொண்டான். ()

பதினான்காவது
குணாதீதவத்தியாயம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௬௧௧.

---

பதினைந்தாவது

## பிரபஞ்ச அத்தியாயம்.

சாயையன்னவென்வினைத்தளையறுக்கவோதகவிற்
பேயையின்னுயிர்செகுக்கவோபிள்ளையாய்வளர்ந்தான்
வேயையொன்றியவரிசிலைவிசயற்குமீள
மாயைதன்னையோர்மரமொக்கவருணிக்கலுற்றான். (௧)

வேறு.

வேர்மேலதுதலைகீழதுவீவில்லதுவேதத்
தேர்மேவியவிலைமேவியதியாரும்புகறலினா
லார்மேவியவசுவத்தமதெனவேயரசதனின்
பேர்மேவியபெருமாயைசெய்பிறவிப்பெருமரமே. (௨)

இவ்வாறிதினியல்பாகியவகையாதெனிலியாது
மொவ்வாவகைபெரிதாகியபிரமத்துருவிடையே
வைவாள்வலியுழவாவரன்முறையேவரன்முறையே
மெய்வான்முதல்வருமாதலின்மேலானதுவேரோ. (௩)

ஊழால்வருமுலகாகியுமுயிராகியுமெழலாற்
கீழானதுதலையாய்வருமுதலீறிடைகிளர்வாய்ச்
சூழாகியபிறவித்தொடரொருகாலமுமடையப்
பாழாம்வகையழியாமையிலழியாததோர்படியே. (௪)

கருநாண்முதல்வினையாலதுவளர்காதல்செய்தலினா
லருநான்மறையவையேயிலையவையாமெனவறிநீ
வருநாள்களினொருநாள்பெறும்வகையின்மையினாலே
பெருநர்டறியசுவத்தமதெனலாயதுபெயரோ. (௫)

மற்றிப்படிநிகழ்கின்றவிம்மாயாமரமிதனின்
பெற்றித்திறமிதுவல்லதுபிறிதின்மையினாலே
யுற்றிப்படியுணர்வார்பொருளெல்லாவுமுணர்ந்தா
ரிற்றிப்பெருமரத்தின்றிறமின்னஞ்சிலவுளகேள். (௬)

கண்ணேயெனவினையாய்பலபிறவிக்கதிவழியே
மண்ணேமுதல்கீழாமுலகிடையேவளர்வனவும்
விண்ணேமுதன்மேலாமுலகிடையேமிடைவனவு
மெண்ணேறியபவமாகியபணையாலிசைதருமே. (௭)

நெறியால்வருவினைவேர்பலநிலமாமுலகிடையே
யறியாமையொடுறவீழ்தலில்வேர்கீழினுமுளதாம்
பிறியாதெழுகுணமாகியபெருநீர்மையில்வளரும்
பொறியாகியவிவைதான்றளிர்போன்மேயதுபொலிவே. (௮)

கனவுந்திகழ்கழுதாழியுமிருகந்தர்வநகரு
மெனவந்தழிதலினாலுருவதுவின்றியதியாது

முனம்வந் திடுமுதனொளொடுமுடிவின்மையினாலே
தனதந்தமுமுதலுந்தெரிதரவில்லதுதானே. (கூ)

வேறு.

மந்திரமாயவிந்த மாத்தினைத்துறவென்கின்ற
தந்திரவாளால்வெட்டித் தற்பரமாகிநின்றே
யிந்திரசாலமென்ன யாவுமென்னிடையேகாட்டு
மந்தமிலாதவென்னை யடைகையேயடுப்பதையா. (கo)

துன்னியவாசைகோபங் கடந்தவர்காணத்தோன்று
மென்னுருவியற்கைகேட் கிலியாவையுங்காட்டுகின்ற
மன்னியவொளிகள்காணு வகையதாய்வந்துசேர்ந்தார்
பின்னியல்வேறென்றாகாப் பெற்றியேனென்றுபேசும். (கக)

குடந்தொறுந்தோன்றுகின்ற வாகாயமுங்குலைதற்கேற்பத்
தடம்புனறோறுந்தோன்றுஞ் சந்திரன்றானுமென்ன
வுடம்புகடோறும்வேறு யுயிரெனநின்றேயந்த
விடம்படுபுலன்களாறு மியல்பினிலியற்றுவேனன். (கஉ)

பூக்கமழ்நாற்றங்கொண்டு போருவளிபோகுமாபோற்
றீக்கனல்கின்றவேலோய் சிவனென்கின்றசீரோ
ராக்கையையெய்தும்போது மதனைவிட்டேகும்போதும்
போக்கரிதாயவாறு புலன்களைக்கொண்டுபோமால். (கங)

வேறு.

மின்னேயனையவுடம்புதனை விடுவதடைவதாய்விடயந்
தன்னேரிலாதானது தானேயார்கின்றானோர்தன்மையினை
யென்னோர்காணாரறியாதா ரறிவார்யோகத்தாலேதம்
முன்னேகாண்பரிதனியற்கைத் தெளிநீயின்னமொழிவன்கேள். ()

வேறு.

இந்தியங்களுக்குங்கண்ணு ளிரவிதீயிந்துவின்பால்
வந்தெழுகதிருநானே மாநிலமாகிநின்று
கந்தியன்றனையதோளாய் காமமேமுதலாந்தன்மை
தந்திரந்தவிர்த்திதெல்லாந் தாங்குகின்றேனுநானே. (கரு)

வேறு.

முந்துவானிற்சுடர் மூர்த்தமாகிய
விந்துவாகிநின்றுண்பனயாவையுந்
தந்துசேர்சுவை யவற்றிலேதக
நைந்திடாவகை வளர்க்கின்றேனுநான். (கசா)

இன்பாக்குவ சுவைப்பவுண்பவாய்
நன்பயன்செயு நால்வகையுண்டியு
மின்பமாம்வகை யாக்கைகடன்னினின்
றன்பவங்கியாயறுக் கின்றேனுநான். (கஎ)

நல்லமாந்தர் நல்லறிவுநன்கிலாப்
புல்லர்தங்கள் புல்லறிவும்போர்திகழ்
வில்லமைந்ததோள் வீரர்வீரயா
னல்லதில்லையென் றறியவேண்டுமே. (கஅ)

அசைவிலாமறைக்கறிவு நானதன்
வசையிலாதமெய்பொருளும் வாய்மைசே
ரிசையினாலெடுத்தோது வேனுநான்
விசையகேளினம் வேறுமொன்றையே. (கக)

மருவுகின்றவிவ் வுலகின்மாய்தலே
யுருவமாகமுன் புடையதொன்றுமே
யருவமொன்றினு லழிவதின்மையே
பொருவகின்றதோர் பொருளுமுண்டோ. (உ0)

மொழிசெய்கின்ற இவ்விரண்டுமுற்றவே
விழியினாலுறநோக்கின் மெய்மையே
யழிவதாக்கையங் கழிவுபாடிலா
தொழிவதென்னெனி னுயிரொன்கின்றதே. (உக)

இவையிரண்டையுங்கடந்தியானுமோர்
நவையுமின்றியேநாசமின்றியே
யெவையுமின்றியேயிழிவுமின்றியே
குவையினின்றதோர்குறியிலின்பமே. (உஉ)

இந்தவின்பமாமென்னையுள்ளவா
சிந்தையின்கணேதெளிதன்மேயினார்
பந்தமொன்றிலார்பழையவிப்பொருட்
கந்தமாதிவேறறியவொண்ணுமோ. (உங)

வேதநாலுநின் றுரைசெய்தாலுமொன்
றோதலாவதன் றுலகமிந்ததோ
காதலாலெனக்கினியதோழனீ
யாதலாலுனக்கறியவோதினேன். (உச)

வேறு.

கண்ணையோரிடத்துமின்றியதனிலேவைக்கிற்காதற்
பண்ணையோடாக்குகின்றவினையெலாம்பயக்குமென்றான்
வெண்ணையோவிதுரனிட்டவிருந்தையோவேலைசூழ்ந்த
மண்ணையோவுண்டுமுன்னாள்வருபசிதீர்ந்தமாயோன். (௨௫)

பதினைந்தாவது

பிரபஞ்சவத்தியாயம் - முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௪௩௬.

---

பதினாறாவது

## தேவாசுர அத்தியாயம்.

மறந்திருந்தமனத்திருணீங்கிடத்
திறந்திறப்படச்செப்புதன்மேயினை
னறந்திறந்தெரிந்தாக்குதற்காகவே
பிறந்திறந்துழல்கின்றபேராளனே. (௧)

தெய்வவாசுரரொன்றித்திறத்தராய்
வையமாந்தரொல்லார்களும்வாழ்வதிங்
கையமேகளவற்றின்றிறமென்றுதன்
செய்யவாய்திறந்திவ்வண்ணஞ்செப்பினான். (௨)

வேறு.

அஞ்சுதலின்மையுமறிவையாக்கலு
நெஞ்சினையடக்கலுநிலைகெடாமையு
வெஞ்சினமின்மையுமெய்ம்மைகூறலுந்
தஞ்செனவேள்வியுந்தவமுமாக்கலும். (௩)

மறைபயிறலுந்தனைமதித்திராமையுங்
குறைகடவிர்தலுங்கொல்கைமாற்றலும்
பிறர்பிழைபொறுத்தலும்பேரொழுக்கமு
மறன்வலிதானமோடருளையாக்கலும். (௪)

இருவகைத்தூய்மையுமிந்தியங்களை
யொருவழிப்படுத்தலுமுள்ளிட்டன்னவை
செருவருஞ்சிலையினாய்தெய்வத்தன்மையோர்
மருவியதொழிலெனமதிக்கவேண்டுமே. (௫)

வேறு.

தீமைசெய்யசுரரானோர்செய்கையைத்தெரிக்கிலொன்றை
யாம்வகையெனமற்றுகாதனவெனவறிதலில்லார்
தூய்மையுந்தூயவாயவொழுக்கமுந்தொடக்குவிட்டார்
வாய்மையொன்றுனுமில்லார்மயக்கமேமருவாநின்றார். (சு)

வேறு.

எண்ணியவுலகமுமுலகிற்கீசனும்
புண்ணியபாவமும்பொய்யென்றேகொள்வர்
பெண்ணினோடாண்புணர்கின்றபெற்றியா
னண்ணியயாவையுமென்றுநாட்டுவார். (எ)

வேறு.

விரும்பலராகியொழுக்கங்கடுறந்தார்மெய்மையுஞ்செம்மையும்விட்டார், திரும்பயனுணவறிவுமாய்ந்துள்ளாரிடம்படாமனத்தினேடிசைந்தார், பெரும்பழியானதொழில்களேபுரிவார்பிழைப்புவாய்ப்பொன்றறியாதா, ரரும்பகையாயிவ்வுலகினையெல்லாமழிப்பதன்பொருட்டவதரித்தார். (அ)

வேறு.

நிறைவிலாக்காமபோகந் தன்னையேநிறைக்கவேண்டி
மறைவிலாமானத்தோடுமதங்களைமருவிநின்றுங்
குறைவிலாமயக்கத்தோடுகோபத்தையடைந்துநின்றும்
பொறையிலாவிரதம்பூண்டும்பொய்த்தவம்புரியாநிற்பார். (கூ)

இறந்துபோமளவுமெய்தாப்பொருளையேயெண்ணுநிற்பார்
மறந்துமோர்பொருள்வேறில்லைவருபயனன்றியென்பார்
சிறந்தபோகங்கட்காகத்தீமையாற்பொருளைச்சேர்ப்பார்
பிறந்துபேராசையாயபாசத்தாற்பிணிக்கப்பட்டார். (கO)

இப்பொருளடைந்தோம்வேறுபொருளினையடைவோமென்று
மிப்பகைசெகுத்தோம்வேறுபகையினைச்செகுப்போமென்றுந்
துய்ப்பவொம்மிற்றுய்க்கவல்லவரில்லையென்று
மொப்பவொம்மின்மிக்காருளர்கொலென்றுணராநிற்பர். (கக)

இனம்வலியின்பம்பெற்றேமெம்மின்மிக்கார்களில்லைத்
தனமிகவுடையோமென்றுந்தம்மையேவியவாநிற்பார்
மனமகிழ்யாகஞ்செய்வோமழையெனக்கொடுப்போமென்றுந்
தினமவைதோறுஞ்சிந்திப்பதுவலாற்செய்வதில்லார். (கஉ)

வேறு.

தொடக்கறவில்லாவினையெனப்பட்டகுழலைப்பற்றியேசுழல்வா
ரடக்கரிதாயமயக்கமென்கின்றவலையுளேயகப்பட்டுநின்று' [திக்
குடற்குடில்வாழ்வாம்புன்னுனைப்பனிநீருவர்ந்திடினுயிர்நடுக்கெய்
கடப்பரிதாயநரகமென்கின்றகடல்களில்வீழவேகடவார். (௧௩)

வியந்துதங்களையேமேலாய்ப்பார்த்துமெய்மாந்தர்தம்மை
நயந்துகொண்டாடலில்லார்நல்லவைசெய்தாரொன்று
பயன்றொடர்ந்துரைத்தற்காகப்பாடியபழைய நூல்க
ளியம்பியபடிசெய்யாதேயாகங்களியற்றுநிற்பார். (௧௪)

வேறு.

மன்னியகளிப்பொடுவலியுங்காமமுந்
துன்னியானெனும்பெருமயக்கஞ்சூழ்ந்துளா
ரொன்னியல்பினைத்தமில்யாவர்மாட்டினு
மன்னியமெனக்கொடுபொறாமையாக்குவார். (௧௫)

வேறு.

மற்றவர்தம்மையிந்தமானுடரானோரியார்க்குங்
கொற்றவகிழானோக்கொடுமையாலரவொப்பாரை
யற்றமிலிடும்பைசேருமாசுரயோனியாய
புற்றவைதோறுமியானேபுகப்புகவிழுத்துகின்றேன். (௧௬)

வேறு

இவ்வகையாசுர யோனியடைந்தோர்
மெய்வகையாமறி வின்மையினாலே
னைவர்கட நரகக்கதிதோறு
முய்வகையின்றி யுழன்றுதிரிந்தே. (௧௭)

ஒருவனசிக்க வியற்றுவதென்று
மருநரகத்தி னடைப்பதுதானும்
வரும்வழிமூன்றுள மற்றவைதம்மை
யொருமுறைகூறி யுணர்த்திடுவன்கேள். (௧௮)

காதலினாகிய காமமுலோபமுங்
கோதுறவேசுடு தீநிகர்கோபமு
மாதலினாலிவை மூன்றுமகன்றோர்
வேதனைதீர்பெரு வீடுவிழைந்தார். (௧௯)

கூறினநூல்வழி சேர்குறிபேணு
தேறினவாறுசெய் வாரிகலோகம்

வெறியலார்பர லோகம்விளைக்கும்
பேறினவானவை பேறுபெறுவரால். (௨௦)

வேறு.

ஆதலிலடாத வறிவைகக்குவழியான
வேதமுதனூலவை விதித்தநெறியாலே
யேதமினையாதுன் வினையேயிசைகவென்றான்
பூதமுதலானவை பொறுத்தருளுகின்றான். (௨௧)

பதினாறாவது

தேவாசுரவத்தியாயம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௱௫௭.

---

பதினேழாவது

## குணவிகார அத்தியாயம்.

—ஃ—

உண்டுமீள வொழித்துலகியாவையுங்
கண்டுகாப்பவன் கட்டுரைத்திட்டதே
கொண்டுபார்த்தனக் கொண்டல்வண்ணன்றனைத்
தொண்டுகூறிப் பணிந்திதுசொல்லுவான். (௧)

வேதமேமுதனூல் விதியன்றியே
காதலாலுலகோர் செயுங்காரிய
மேதமாங்குண மூன்றினுமியாதென
வோதமாக்கடல் வண்ணனுமோதுவான். (௨)

வேறு.

யாவர்களாசைப் பாடுமியம்பிடிலியம்பப்பட்ட
மூவகைக்குணமுமாகி யல்லதுமுடிந்ததில்லா
மேவருமவற்றினுய வேறுபாடதனையெல்லாங்
காவலதெரியக்கூறக் கேளெனக்கழறலுற்றான். (௩)

வேறு.

சாத்துவிதர்தேவரையே சரண்புகுவர்தாமதர்கள்
காத்தல்புரிவனபேயும் பூதமுமாய்க்கடைப்பிடிப்ப
ரோத்தரியகுணமிவற்றிலி ராசதமாங்குணமுடையோ
ராத்தரெனவியக்கராயு மரக்கராயுமடைகுவரால். (௪)

வேறு.

அடங்கியபொறியினு மறிவுமன்றியே
யிடம்படுநூல்களி னியல்புமின்றியே
யுடம்பையுமுயிரையு மாய்க்குமாதவந்
தொடங்கினராசுரயோ னியினிற்றேன்றினர். (௫)

வேறு.

உண்பனயாகமாறு முறுதவந்தானமென்ன
வொண்படவுரைத்தநான்கு மோரொன்றுமூன்றாய்நின்ற
பண்படுகுணங்களாலே கேளெனப்பற்றுவீடு
நண்பொடுபகையுமில்லான் முறையினைவிற்றலுற்றான். (௬)

சத்துவகுணத்தோருண்டி யுரைத்திடிலழகுசார்ந்து
தித்தித்தசுவையவாகி நெய்த்துச்சிக்கெனவுசேர்ந்து
வத்தித்துவலிநோயின்மை யறிவுநல்லாயுவின்பம்
வத்திக்கச்செய்தவிந்த வுணவுகண்மடங்கலன்றாய். (௭)

இப்படியன்றிவேறாயிரா சதருணவுகேட்கிற்
கைப்பனபுளிப்புவர்ப்புக் கூர்ப்பனகடியவெய்து
நெய்ப்பயினெருப்புப்போலச் சுடுவனவிவற்றினாலே
மெய்ப்படுநோயுநெஞ்சத் திடும்பையும்விளைவவேலோய். (௮)

ஆசினையடைந்தநெஞ்சிற் றாமதருணவுகேட்கி
னூசினபழஞ்சோறெச்சி லும்பர்பூசனைக்காகாமை
யேசினவெந்நிலாத வினையனவிவற்றினாலே
காய்சினமுதலாயுள்ள துயரெலாம்விளைவகண்டாய். (௯)

செயத்தகுவனவென்றல்லாற் சேர்பயன்சிந்தியாதே
தயக்கநான்முறைசெய்யாகஞ் சாத்திகஞ்சாரியாகம்
பயத்தையேவேண்டியாதல் பலர்புகழ்வேண்டியாத
லியற்றுறும்யாகமெல்லா மிராசதயாகமாமே. (௧௦)

நூற்படுநெறியுமின்றி நுனித்தவவ்வினையின்மேலோர்
தாற்பரியமுமதின்றித் தக்கமந்திரமுமின்றி
யேற்பவர்க்கிதலின்றி யியற்றுறுகின்றயாகந்
தார்ப்பொலிகின்றமார்பா தாமதயாகமாமே. (௧௧)

வேறு.

தீக்குலாம்வேலினாய்த வத்தின்செய்கைதான்
வாக்கினாற்பேசுதன் மனத்தினுக்குத

லாக்கையாலியற்றுத லாயிருப்பது
நோக்கிநாமிவற்றினை நுனித்துக்கூறுவாம். (கஉ)

வேறு.

தீர்த்தயார்க்குஞ் செவிக்கினிதாயின
வார்த்தைமாமருந் தேயெனலாவது
வோர்த்துமெய்மொழி கூறுதலோதுதல்
வார்த்தையாற்பண்ணு மாதவமாவதே. (கூ)

தெளிவினெஞ்சைத் தெளியப்பிடித்தலுங்
களிசெயைம்புலனைக் களிமாற்றலுங்
குளிர்வினெஞ்சினு ணர்வுகொடாமையு
மெளிதின்மானத மாதவமென்பதே. (கச)

தலைமையந்தணர் தேவர்குரவர்பான்
மலைதலின்றிவழி படுவாழ்க்கையுங்
கொலைதுறத்தலுங் காமங்குறைத்தலுந்
தலைவகாயத் தவமெனப்பட்டதே. (கரு)

வேறு.

தீத்தவழும்வடிவேலோய் செப்பியவிம்மூன்றுஞ்
சாத்துலகமகிழ்வெய்தச் செய்கின்றவருந்தவத்தி
னார்த்துவரும்பயன்வேண்டா தாகின்றவருந்தவந்தான்
சாத்துவிததவமென்று சாற்றுவதுதக்கோரே. (கசு)

வசையிறவமுடையரென மாநுடர்கொண்டாடுகைக்கு
நசையினெடுபொருள்பெறவுஞ் செய்கின்றநற்றவத்தை
விசயவுனக்குரைசெய்தேன் மிகப்பெரியோர்செய்திடினு
மிசையவறிமற்றிதனை யிராசதமாந்தவமென்றே. (கஎ)

பேதைமையைமிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்கும்பிறவுயிர்க்கு
மேதமுறுபெருந்துயருங் கேடுமேயியற்றுவதா
யாதவனும்பனியுமுழன் றூற்றுகின்றவருந்தவந்தான்
றூதலருநெடுமுடியாய் தாமதமாந்தவமாமே. (கஅ)

வேறு.

மூன்செய்காரியப்பொருட்டு மின்றியேமுடித்திதனாற்
பின்பொருநற்பொருள்விளையு மென்பதுவும்பேணாதே
நன்குடையகாலத்தே நல்லிடத்தேநல்லவர்க்குத்
தன்பொருளைக்கொடுக்குமது சாத்துவிததானமே. (ககூ)

கொண்டுசெயத்தகுங்கருமமெனுங்குறிப்பொன்றின்றியே
பண்டுசிலர்செய்ததற்காய்ப்பரிவோடுபண்ணினவு
முண்டிதனுன்மேல்விளைவென்றுணர்வோடிச்செய்வனவு
மெண்டிசையுநிறைபுகழாயிராசதமாந்தானமே. (உ௦)

வாயாதவொருபொருளை வழங்காதகாலத்தே
யேயாதநிலத்திடையேயிழிந்தகுலத்தவர்களுக்கே
யாயாதவறிவிஞெடுமப்பிரியத்தொடுங்கொடுத்தல்
சாயாதபெருந்திறலோய்தாமதமாந்தானமே. (உக)

வேறு.

ஒப்பரிதாயவுண்டியோடியாகமுறுதவந்தானமென்றுரைத்த
வப்படியெல்லாமறிவகையுனக்குமுரைத்தனனடையமற்றையா
மெய்ப்படியாமற்றிவற்றினைச்செய்துவீடுபெற்றுயர்நெறியாவ [ணீ.
தெப்படியென்னிலதனையுமுனக்குத்தெரிவகையுணர்த்துவன்கே

வேறு.

ஓமென்கின்றதனியெழுத்துமுரைத்தற்கரியதற்பதமுந்
தாமங்கமழ்தார்மார்பனேசத்தென்கின்றதனிப்பதமு
மாமென்கின்றவிவைமூன்றுமறிவின்பெயர்மற்றிவற்றாலே
யாமுன்புணருமறைமறையோர்யாகந்தோன்றிற்றெனவறிவாய்.()

ஓமென்றுரைத்தேவினைசெய்வார்வீடுற்றவர்வீடுறுமவர்க
டாமுன்புரைத்ததற்பதத்தையுரைத்தேசெய்வர்சத்தென்றே
யாமென்கின்றவிவைமூன்றும்வினைமற்றினமாயினவெல்லாங்
காமபலத்தின்மேலின்றிச்செய்வாரறிஞர்கதிர்வேலோய். (உச)

வேறு.

காதலாலிந்தப்பதங்கண்மூன்றினையுங்கற்றுணர்ந்தவர்கடங்க
ருத்தா, லோதலாம்வகையாலுரைத்தலாற்றவமுந்தானமுமுதலி
யவொழியா, ராதலாலிந்தப்பதங்களையுரைத்தேவினைசெயத்தகுவ
தென்றுரைத்தான், மீதிலாவுலகந்தன்னுளேயுதிப்பத்தேவகிதிரு
வயிற்றுதித்தோன். (உரு)

பதினேழாவது

குணவிகாரவத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சஅஉ.

---

பதினெட்டாவது

## சஞ்சேப அத்தியாயம்.

ஏகமேகருதுவாரிதயமேவிளைவதோர்
போகமேயுலகிலோர்பொருவிலாவொருவனே
நாகமேயமளியாய்களினமேலமர்வதோர்
மேகமேபணியெனுவிசயன்மேல்வினவுவான். (௧)

வேறு.

சந்நியாசமாவதுந்தகுந்தியாகமாவது
மென்னியாயமாகவெம்பிரானியம்புகென்னவே
வன்னிவாயுவானமாகிமண்ணுநீருமாகியோன்
றுன்னியாயப்பொருட்டொகைத்திறஞ்சொலத்தொடங்கினான் ()

காமமென்றிடும்பலன்செய்கன்மமானயாவையுந்
தாமடங்கவேயிகத்தல்சந்நியாசமாவதிங்
கேமமின்றியெவ்வினைப்பயன்களானயாவையுந்
தீமையென்றறத்துடைத்திருத்தறியாகமாவதே. (௩)

தீங்கியற்றுகின்றதீவினைத்திறங்கள்போலவே
யீங்கியற்றுகின்றநல்வினைத்திறங்களியாவையு
மாங்கியற்றலின்றிவிட்டிருத்தலேயருத்தமாச்
சாங்கியத்தையோதிடுந்தவத்துளோருரைப்பரால். (௪)

ஞானகாரணங்களாதலாலியாகநற்றவந்
தானமோடிகத்தலைத்தகாமைகூறுவாருள
ரானகாரணத்தினாலறிந்தடங்கினாற்கலா
லீனமாமிவற்றைவிட்டிகத்தலென்றிருத்தலே. (௫)

வேறு.

தியாகமூன்றுவகைப்படுஞ்செப்பக்கே
ளியாகமுந்தவந்தானமுமென்றிவை
மயாலறுக்குமனத்தினையாதலா
லையாவுமாக்கில்விடுகையடாததால். (௬)

என்னசெய்வதெனிலிவ்வினைகளாற்
பின்னையெய்தும்பெரும்பயனாவது
தன்னைவிட்டுச்செயத்தகுமென்பது
முன்னையோர்க்குமெனக்குமுடிவரோ. (௭)

நித்தமாயவினையினெறியினை
மத்தர்போலவொருவன்மயக்கினுற்
பித்தனாய்விடுகின்றவப்பெற்றியைச்
சித்ததாமதத்தியாகமென்கின்றதே. (அ)

மெய்வருத்தமுண்டென்றுவிடுவது
மையமின்றியிராசதத்தியர்கமாங்
கைவரும்பலமாசைகைமாறவே
செய்வசெய்வதுசத்துவத்தியாகமே. (கூ)

யாதின்மாட்டினுமையமொன்றின்றியே
தீதின்ஞானியுந்தியாகியுமானவன்
கோதிலின்பமுந்துன்பமுங்கூர்வினை
மீதுவேண்டல்வேண்டாமையும்வீடுமால். (க0)

யாக்கையோடுமிசையிலிருவினை
நீக்கலாவனவல்லநிலத்திடை
வீக்கமாயவினைப்பயன்வீடினார்
போக்கலாவினையாவையும்போக்கினார். (கக)

வேறு.

இன்னாதனவுமினியனவுமிரண்டுங்கூடியிசைந்தவுமாய்
முன்னாநின்றவினைமூன்றுமவற்றால்வந்தமுடிபொருளும்
பொன்னுனதுவுந்தொழிலும்போலிருக்குமிந்தப்பொய்மெய்யை
யுன்னாதவர்க்கேயுள்ளதிவையுணர்ந்தோர்க்குளவாயுதியாவால்.()

வேறு.

ஓங்கியவுலகினிலுயர்ந்தநன்மையுந்
தீங்கினவாம்வினையாவுஞ்செய்தற்குச்
சாங்கிய நூலிலேயுரைத்தசாதன
மீங்கிவையைந்தையுமெடுத்துக்கூறுவாம். (கூ)

இருப்பிடமாமுடம்பியற்றுமாருயிர்
கருத்தினைமுதலியகரணங்காற்றினால்
விருப்பொடுவருந்தொழிலிவற்றின்மெய்ப்பா
ணருத்தமாமொழியெனவாகவைந்தரோ. (கச)

வாக்கினாலாதன்மெய்மனத்தினுதம்
யாக்கையாலாதலிவ்வுலகிலியாவரும்

